Arun
ICECREAMS

# DOUBLE HIT




## MAKES CHANNEL [V] LOOK LIKE A NICE UGC PROGRAMME !

Here it is. A delicious creation made from rich chocolate, crunchy caramel, toasted cashew, creamy, dreamy icecream... Just try it. It will make even Janet Jackson look as staid as an educational programme... as saintly as...

## YUM-YUM CHIKKI YUM-YUM

Trikaya Grey MAS. HF. 20.95

# டென்னிஸ் தேவதைகளின் நிஜ முகங்கள்



• சபாடினி



• ஸ்டெ.பி



• மோனிகா

## கேப்ரியலா சபாடினி

❖ அரட்டையும் கலகலப்புமாகக் கழிய வேண்டிய டீனேஜி லேயே ரொம்பக் கூச்ச மும், வெட்கமுமாய் ஒடுங்கியிருந்தவர். (இப் போது வயது 23!)

❖ "எனக்குள் எப்போ தும் ஒரு வருத்தம் உண்டு. இனம் புரியாத வருத்தம். எப்போதும் ஒருவித ப்ரஷரிலேயே வாழ் கிறேன்" என்று அவ்வப்போது கூறித் தம் ரசிகர்களைக் கண்கலங்க வைப் பார்.

❖ ஆங்கில அறிவு போதாது; உடைந்த ஆங்கிலத்தில்தான் பேச வரும்.

❖ பாப் இசை ரொம்ப இஷ்டம். பாடல் வரிகளைப் புரிந்து கொண்டால்தான் ரசித் துப் பாடமுடியும் என்பதால் டென்னிஸ் ராக்கெட்டின் கூடவே ஆங்கில அகராதி ஒன்றையும் எடுத்துச் செல்வது வழக்கம்.

❖ மில்லியன்-டாலர் ஒப்பந்தத்துடன் பெப்சி நிறுவனம் அணுகிய ஒரே பெண் மணி இவர்தான். டென்னிசைவிட மாட லிங் மூலம் அதிகம் சம்பாதித்திருக்கிறார்! அமெரிக்காவில் ஒரு 'சென்ட்'டிற்கு சபா டினி என்று பெயர் வைத்திருக்கிறார்கள்.

## மோனிகா செலஸ்:

❖ நிறைய கார்ட்டூன் படங்களைப் பார்ப்பார். டாம் அண்ட் ஜெர்ரி கார்ட்டூன் உயிர்! அப்பாவே ஒரு சிறந்த கார்ட்டூனிஸ்ட் தான்.

❖ மனத்துக்குத் தோன்றியதையெல்லாம் பேச்சுவாக்கில் மடமடவெனக் கொட்டுவ தால் 'டென்னிஸ் உலகின் மடோனா' என்று செல்லமாகக் குறிக்கப்படுவதுண்டு.

❖ தம்மை ஆதரித்த பிரபல அமெரிக்க ரியல் எஸ்டேட் அதிபர் டொனால்ட் ட்ரம்புக்கு வெளிப்படையாக விளையாட்டு மைதானத்தில் நன்றி கூற, கேலிக் கூக்குரலிட் டார்கள் மக்கள். (ட்ரம்ப்புக்கு ஒழுக்க ரீதி யாக நல்ல பெயர் கிடையாது)

❖ 'பந்தை அடிக்கும்போதெல்லாம் முன கல் ஒலி எழுப்புவது ஏன்?' என்று கேட் டால், "அவ்வளவு தெளிவாகவா அது கேட் கிறது?" என்று வெட்கத்துடன் ஆச்சரியப் படுகிறார்!

## ஸ்டெபி கிராஃப்

❖ இத்தாலிய மற்றும் ஜெர்மன் உணவு வகைகள், கேக்குகள் வெகு இஷ்டம்.

❖ 'மக்களிடையே ஏற்படும் இமேஜை பற்றி எனக்குக் கவலையில்லை' என்கிறார் இந்த தீர்க்கமான மூக்கழகி. (சுகன்யா மூக்கையும், ஸ்டெப்பி மூக்கையும் யாரே னும் ஒப்பிட்டிருக்கிறார்களா?)

❖ புகைப்படம் எடுப்பதில் நிறைய ஆர்வம். எப்போதும் காமெரா கூடவே இருக்கும். நசுங்கிய கார்கள், வீசியெறியப் பட்ட டின்கள் - இப்படிப் பொதுவாக அலட்சியப் படுத்தப்படும் பொருள்களை 'க்ளிக்' செய் வதில்தான் ரொம்பக் ருசி.

❖ பெக்கரையும் தம்மையும் இணைத்து எழும் கிசுகிசுக்களின் மீது ரொம்ப எரிச்சல். "அவர் வாழ்க்கைமுறை வேறு. என்னுடை யது வேறு. நான் ரொம்ப கலகலப்பானவள் அல்ல. அவரோ நேரெதிர்! எனக்கு ஜெர் மனியில் இருக்கவே பிடிக்கும். அவரோ மான்டே கார்லோவில் சுகம் காண என்னு பவர். நாங்கள் எப்படி இணைய முடியும்?" என்பது இவர் வாதம்.

❖ அடிக்கடி உடல் நலக் குறைவு ஏற்படும். இப்போது முதுகுவலி. "இதுவரை ஐந்து சர்வதேசப் போட்டிகளில்தான் முழு உடல் நலத்தோடு ஆடியிருக்கிறேன்" என்கிறார்.

— ஜி.எஸ்.எஸ்.

**இந்தியாவிலேயே அதிவேக ஓட்ட வீரர், தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்தான் என்பதில் மிகப் பெருமையாக இருக்கிறதென்று சமீபத்தில் ஜெ. சொல்லியிருக்கிறார். பெருமைக்குக் காரணர் ஆனந்த நடராஜன்.**

# ஆனந்த

அண்ணாமலை பல்கலைக் கழகத்துக்கு வந்த கலைஞர் கருணாநிதி, 'தில்லையிலே ஒரு நடராஜன் ஆடிக் கொண்டிருக்கிறார். இங்கே ஒரு நடராஜன் ஓடிக் கொண்டிருக்கிறார்' என்று பேசினார். அவர் குறிப்பிட்டது, அண்ணாமலை பல்கலையில் பி.பார்ம் படித்துக் கொண்டிருந்த ஓட்டப் பந்தய வீரர் ஆனந்த நடராஜனை.

நடராஜன் செட்டிநாட்டுக்காரர். அப்பா ஐ.ஓ.பி.யில் அதிகாரி. மாநில ஹாக்கி அணியில் இடம்பெற்றிருந்தவர். அம்மா, சகோதரி, தாத்தா என அனைவருமே விளையாட்டு வீரர், வீராங்கனைதான்.

நடராஜன் கல்லூரி நாட்களில், ஆடியது கூடைப் பந்து. ஆனாலும், பல்கலைக் கழக அணியில், முதல் ஐந்தில் இடம்பெற முடியாமல் போனதால், சப்ஸ்டிட்யூட்டாக ஆட்டத்தை வேடிக்கை பார்க்க உட்கார வைத்து விடுவார்கள்! இதில் ஆனந்த நடராஜனுக்கு ஆனந்தமில்லை.

இந்தச் சூழ்நிலையில்தான் பல்கலைக் கழக விளையாட்டு இயக்குனர் இவரிடம், "உன்னுடைய ஆறு அடி உயரம் உனக்குப் பெரிய பலம். ஓட்டத்தில் நீ கவனம் செலுத்து' என்று ஆலோசனை கூற, நடராஜன் தடகளத்துக்குத் தடம் மாறினார்.

"உலக பல்கலைக் கழக மாணவர்கள் போட்டிக்கான செலக்ஷன், பெங்களூரில் நடந்து முடிந்து விட்டது. யாருமே தேர்வு செய்யப்படவில்லை. நான் முயற்சி செய்ய நினைத்தேன். ஒரு வாய்ப்பு கொடுத்தார்கள். நான் மட்டும் பங்கேற்க, குறைந்தபட்ச நேரத்தில் ஓடி, தேர்வு செய்யப்பட்டேன். டெஹ்ரானில் நடந்த போட்டியில் எனக்கு வெள்ளிப் பதக்கம். மாநில, தேசிய அளவில் போட்டிகளில் பங்கேற்காமல், அதில் உலக அளவில் நடந்த போட்டியில் பங்கேற்று வென்றது குறிப்பிடத்தக்க விஷயம்" என்கிறார் ஆ. நடராஜன்.

" '89ல் இஸ்லாமாபாதில் நடந்த தெற்காசிய நாடுகளுக்கான தடகள விளையாட்டுப் போட்டியில் (SAF) நூறு மீட்டர் ஓட்டத்தில் புதிய சாதனை புரிந்தேன். 200 மீ.ல் வெள்ளி எனக்கு!"





"தொண்ணூறாம் வருடம் எனக்கு மாபெரும் சரிவு. சீர்காழியில் ஒரு மைதானத்தில் ஓடிக் கொண்டிருக்கும் போது, நிகழ்ந்த சிறு விபத்தில் என் வலது கால் ஷூவின் ஆணி, இடது முழங்காலில், சுமார் எட்டு அங்குல நீளத்துக்கு கிழித்து விட, பதினெட்டு தையல்கள் போடப்பட்டன. அடுத்த மூன்று மாதங்கள் படுக்கையில் கழிந்தன. மீண்டும், தடகளத்துக்குத் திரும்பி, சாதனை புரிய வேண்டும் என்ற வெறி என்னுள் எழுந்தது. பயிற்சி... பயிற்சி... இடைவிடாத பயிற்சி. மீண்டும் எழுந்தேன். (மௌலியின் 'அஸ்வினி' சினிமா ஞாபகம் வருகிறதா?)

"94ல் இங்கிலாந்திற்கு 72 நாள் சிறப்புப் பயிற்சிக்கு அனுப்பப்பட்டேன். நான் பிரிவெண்டிவ் அதிகாரியாய்ப் பணிபுரியும் கஸ்டம்ஸ் துறையும் தமிழக முதல்வரும் சுமார் மூணே முக்கால் லட்சம் ரூபாய் வரை நிதி வழங்கி உதவினார்கள். இங்கிலாந்து பயிற்சி, எனக்கு ஒரு திருப்புமுனை. என் உடலிலிருந்து ஒரு துளி தசையை எடுத்து, அதை ஸ்கேன் செய்து ஆராய்ந்து என் உடல்வாகு நூறு மீட்டர், இருநூறு மீட்டர் ஓட்டங்களுக்கு மட்டுமே லாயக்கு என்று கூறியது மட்டுமின்றி என் உடல் எவ்வளவு எடை இருக்க வேண்டும், நான் என்ன உணவு உண்ண வேண்டும், எந்த முறையில் பயிற்சி செய்ய வேண்டும் என்றெல்லாம் விலாவாரியாய் சொல்லிக் கொடுத்தார்கள். ஆனால் அரசு அதிகாரிகள் செய்த குளறுபடியால் ஆசிய விளையாட்டுப் போட்டிக்கு என்னால் போக முடியாமல் போய் விட்டது" என்கிறார் வருத்தத்துடன்.

தினசரி நான்கு மணி நேரம் பயிற்சி செய்கிறார் ஆனந்த நடராஜன். அப்போதெல்லாம், அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட சக்தி மிகுந்த மாவு உணவு தவிர வேறு எதையும் தொட மாட்டாராம் இவர்.

இதற்காகும் செலவை இவர் அலுவலகமும் அதில் விளையாட்டு அதிகாரியாய் உள்ள மேகநாத்தும் கொடுத்து உதவுகிறார்கள்.

செப்டம்பரில் ஜகார்தாவில் நடக்கவிருக்கிற SAF போட்டியில் கலந்து கொள்ளப் போகிறார் நடராஜன்.

"நிச்சயம் மெடலுடன் வருவேன்" என்கிறார், உறுதியுடன்.

தன்னம்பிக்கை, என்றாவது ஜெயிக்காமல் போயிருக்கிறதோ!

- மௌலி

## பந்தாட்டம் பலவிதம்!

**கைப்பந்து (Hand ball):**

கூடைப்பந்தின் 'கஸின் பிரதர்'. ஆனால் கோல் போஸ்ட் அகலமாக இருக்கும். ஹாக்கிக்கு அடுத்தபடி அதி வேக விளையாட்டு! ஐரோப்பிய நகரங்களில் பிரபலமானது. அணிக்கு ஏழுபேர். 20 மீட்டருக்கு 40 மீட்டர் விளையாட்டு அரங்கம். ஏழு மீட்டர் தூரத்துக்கு அதாவது கவிழ்த்து வைத்த D ஏரியாவுக்குள் யாரும் நுழையக் கூடாது! பந்தை வீசித்தான் கோல் போட்டாக வேண்டும்.

சட்ட சபையில் இது மாதிரி ஒரு D ஏரியா வைத்தால் சௌகரியம்!

**ஸ்க்வாஷ் :**

இரண்டு பேருக்கு இடையிலான ஆட்டம். மூன்று பக்கம் சுவர் – 'ப' வைக் கவிழ்த்த மாதிரி – விளையாட்டு அரங்கம். மட்டை போல இருக்கும் ராக்கெட்டால் பந்தை அடிக்க வேண்டும். நாம் அடிப்பதை எதிராளி திருப்பி அடிக்காமல் தவறவிட்டால் நமக்கு பாயின்ட். இப்போதைய உலக சாம்பியன் பாகிஸ்தான் வீரர் ஜஹாங்கீர்கான்.

**கால்ஃப்:**

பணக்காரர்களின் விளையாட்டு. ஆடுவதற்கு நிறைய இடம் வேண்டும். பந்தை டீ (Tee) பகுதியிலிருந்து அடித்து, அது குழியில் விழச் செய்ய வேண்டும். எத்தனை குறைவான முறை அடித்துக் குழியில் விழ்த்துகிறீர்கள் என்பதுதான் பாயின்டை நிர்ணயிக்கும். ஒரு குழிக்கும் அடுத்த குழிக்கும் இடையே தூரம் அதிகரித்துக் கொண்டே போகும். மண், மேடு, குட்டை என்று பலவித பிரதேசங்கள் கடந்து ஆடிப் பழக வேண்டும். நடையே நல்ல உடற்பயிற்சி!

-எஸ்.வி.என்.

### தமாஷ் வாலா

**எம்**.எல்.ஏ., எம்.பி., எம்.எல்.ஸி., எது வாகட்டும் - கோவை மாவட்டத்தில் நடக்கிற எந்தத் தேர்தலிலும் குதித்து விடுவார் காலம் சென்ற டாக்டர் எம். நடேசன். கோவையில் இவரைத் தெரியாதவர்களே கிடையாது. ஒரு தொகுதியில் சி.எஸ்ஸும் இவரும் நடத்திய மேடைப் பேச்சில், இவருக்குத்தான் பயங்கரக் கூட்டம். "கூட்டம் போட்டா மட்டும் வந்துருவீங்க. வோட்டு மட்டும் போடாதீங்க!" என்று தமாஷாகப் பேசுவார். "வழிவிடுங்கள். யாரோ ஒரு அன்பர் மாலைபோட வருகிறார்" என்று கூட்டத்தை நோக்கிச் சொல்வார். எல்லோருக்கும் தெரியும், அது அவரது 'செட்-அப்' தான் என்று. தோல்விகளால் துவளாதவர். பல நல்ல காரியங்களையும் செய்திருக்கிறார். ஜெயிப்பதால் மட்டுமல்ல; தோற்பதாலும் பிரமுகராகி விட முடியும் என்பதற்கு இவர் ஓர் எடுத்துக் காட்டு!

— எல். மகாதேவன், கோவை - 26.

### எங்கள் டீ.வியிலும் இந்தியா வெற்றி!

**எ**ங்கள் பக்கத்து வீட்டில் நாலு வயது குட்டிப் பெண் ஒருத்தி. ஒரு நாள் ரொம்ப




தமாஷ் பண்ணி விட்டாள். டீ.வியில் இந்தியா - பாக் மேட்ச் நடந்து கொண்டிருந்தது. இந்தியா ஜெயித்து விட, அப்போது வந்த அந்தக் குட்டிச் சுட்டி, "அட, உங்க டீ.வியிலும் இந்தியா வின்னா? எங்க வீட்டு டீ.வியிலும் இந்தியாதான் வின்!" என விளக்க ஒரே சிரிப்பு. புரியாமல், "நிஜமாத்தான் ஆன்ட்டி. வேணும்னா எங்க வீட்டுக்கு வந்துப் பாருங்க" என்றாளே பார்ப்போம்!

— பிரமிளா அரவிந்த், கோவை - 38.

### தலையெழுத்து!

**கோ**வையில் வெகு வித்தியாசமான பெயர்களில் இரண்டு லாட்டரிக் கடைகள் உள்ளன. 'தாலிக்கு வேலி லாட்டரி சென்டர்' மற்றும் 'தலையெழுத்து லாட்டரி சென்டர்'! இதுதவிர ஒரு மாரியம்மன் கோவிலுக்கு 'பிளேக் மாரியம்மன் கோவில்' என்று பெயர்!

— எஸ். சிவாஜி மனோகர், கோவை - 27.

### பொன்மொழிப் புலவர்!

**எ**ன் தோழன் சசிகுமார் ஒரு கேரக்டர். அரட்டைக்கு நடுவே வினோதமான பொன்மொழிகள் உதிர்ப்பான். சில சாம்பிள்ஸ்:

- காதலிக்காக எதுவும் செய்யாதவன்



முட்டாள். எதையும் செய்பவன் வடிகட்டின முட்டாள்!

- உங்கள் நண்பன் உண்மையானவனா என சோதிக்க, அவனிடம் கடன் கேட்டுப் பாருங்கள். நீங்கள் உங்கள் நண்பனுக்கு உண்மையானவனாக இருக்க விரும்பினால் கடன் கொடுக்காதீர்கள்!
- எவளை உன்னால் மறக்க முடியாது என்றபடி காதலிக்கிறாயோ, அவளை மறக்கு மளவுக்குத் துணிவிருந்தால் மட்டும் காதலி.

— தீபா, உடுமலைப்பேட்டை

### பஸ் பாவை!

**நா**னும் என் நண்பனும் சென்னையிலிருந்து பொள்ளாச்சிக்கு சேரன் பஸ்ஸில் வந்து கொண்டிருந்தோம். அப்போது, நெல்லை செல்லும் ஒரு பஸ்ஸை எங்கள் பஸ் ஓவர்-டேக் செய்ய முயல - ஒரு நிமிடம், இரண்டு பஸ்களும் பக்கத்தில் பக்கத்தில் விரைய ஆரம்பித்தன. நெல்லை பஸ்ஸில்



# கலகல கோவை

என் வீட்டுக்கு எதிரே ஒரு பெண். நானும் நண்பனும் அந்த முழுநீள ஒரு நிமிடமும் அவளையே பார்த்துக் கொண்டிருக்க, பொருத்தமாக பஸ்ஸில் "அடி ஆத்தாடி நீ போடும் பாதை எங்கே போன மானே!" என்று டேப் ஒலிக்க, சிரித்து விட்டோம். அவளும்தான். என் நண்பன் சட்டென்று என் கையிலிருந்த டைரியைப் பிடுங்கி அவளிடம் ஜன்னல் வழியே நீட்டி விட்டான். திடுக்கிட்டுப் போனேன். எங்கள் பஸ் முந்திவிட, அப்புறம் அவளைப் பார்க்க முடியாது போயிற்று. சில நாட்களில் பதிவுத் தபாலில் அந்த டைரியை அவள் என் முகவரிக்கு அனுப்பி வைக்க, நான் நன்றி கூறி பதில் எழுத, அவள் பதிலுக்கு பதில் எழுத அன்று முதல் நாங்கள் நண்பர்கள்!

— கோவை கூத்தரசன், சிலக்காம்பட்டி.

### பிராதன சாலை!

எங்கள் ஏரியாவில் தெருக்களுக்குப் புதிதாகப் பெயர் சூட்டி, பலகை வைத்துக் கொண்டிருந்தார்கள். எங்கள் தெருப் பெயரைப் படித்ததும் அதிர்ந்து விட்டோம்! 'Main Street' ஐ 'பிரதான சாலை'யாக மாற்றியவர்கள், 'பிரதான சாலை'யை 'பிராதன சலை' என்று எழுதியிருந்தார்கள்! நல்ல வேளை, உடன் பார்த்து மாற்றி விட்டோம். எனினும் அந்தக் கொஞ்ச நேரம் தெருவே கலகலத்து விட்டது! மறக்க முடியாத அனுபவம்.

— த. கார்த்திக், கோவை - 12

### பிள்ளை பிறந்த வருத்தம்!

பிரசவத்துக்கு சென்னை போயிருந்தாள் என் மனைவி. மாமனார் போன் செய்தார்: "பிள்ளை பிறந்திருக்கு!" என் அம்மா குழந்தை பிறந்த சந்தோஷத்தில் நண்பர்களுக்கு ஸ்வீட் கொடுத்துக் கொண்டிருக்க, எனக்கு [illegible]மான வருத்தம். 'பொண்ணு பொறந்துடிச்சே. பைனா இருக்கணும்னு வேண்டிக்கிட்டேனே....'

பிறகு தந்தி வந்தது. 'Male Child' என்று குறிப்பிட்டு. அப்புறம்தான் தெரிந்தது. மெட்ராஸ் பாஷையில் பிள்ளை என்றால் ஆண்குழந்தை என்று! இங்கே பெண் குழந்தையைத்தான் பிள்ளை என்று குறிப்பிடுவது வழக்கம்!

— குமார், கோவை - 12

### ஜோக்ஸ்

(விருந்தாளிகள் இருவர், ஒரு வீட்டி விருந்து வெளியேறியபடி)

"அந்தாளு பஸ் கண்டெக்டரா இருக்கலாம். அதுக்காக 'போயிட்டு வர்றோம்'னு சொன்னதுக்கு 'போலாம் ரைட்'னு சொல்றது நல்லாவா இருக்குது?"

— வெ. ஜெயவேல், கோவை - 46



"ஆனாலும் அந்த ஆளுக்கு கொழுப்பு ஜாஸ்திடீ!"

"என்ன செஞ்சாரு?"

"தன் மனைவியைப் பற்றி மனித உரிமைக் குழுவுல புகார் கொடுத்திருக்காராம்!"

— பொ. பொன்ராஜகுமார், பொள்ளாச்சி

# சுரிதார் ஜோசியம்!




சுரிதார் பாஷன் வந்து வெகு நாட்க ளாகி விட்டது. (சௌகர்யம் என்பதால் மாமிகளைக் கூட சுரிதார் சகிதமாய்த்தான் தரிசிக்க முடிகிறது. இது ராம்நகரில் மாமாவின் புலம்பல்) காக்ரா, மிடி, ஜீன்ஸ் என்று ஏகப்பட்ட வெரைட்டி வந்தாலும், கொஞ்ச நாட்களாய் கோவையில் சுரிதார் பெண்களை நிறைய பார்க்க முடிகிறது.

கல்லூரி மாணவர்களை விசாரித்ததில் சுரிதார் ஜோசியம் என்று புதிய தியரியே வைத்திருக்கிறார்கள். துப்பட்டா அணியும் பாணியை வைத்து அந்தப் பெண்ணின் சைக்காலஜியைச் சொல்லி விடுவார்களாம்! இதில் 5 வகை உண்டு என்கிறார்கள்.

1. 'V' ஷேப்பில் துப்பட்டாவை மடித்து முன்னால் போட்டுக் கொள்ளும் பாணி. இவர்கள் ஸ்மார்ட், படிப்பு விஷயத்தில் கொஞ்சம் சுமார் ரகம் என்றாலும் அழகுணர்ச்சி அதிகம். புகழுக்காக அலையும் ரகம். மற்றவர்களின் கருத்துக்கு முன்னுரிமை கொடுப்பவர்கள் (யாராவது ஏதாவது சொன்னால் அதை நினைத்துப் புலம்பும் ரகம்) இவர்களின் ஸ்பெஷாலிட்டி. அடிக்கடி வெட்கப்படுவதுதான். இந்த ஓவர் வெட்கம் ஆரம்பத்தில் ஜாலியாக இருந்தாலும் ஓரளவிற்கு மேல் இது போரடித்து விடுவதால் பையன்கள் காதலிக்கத் தயங்குகிறார்கள்.

2. 'U' ஷேப்பில் கழுத்தைச் சுற்றி துப்பட்டா போடுபவர்கள், (ஷில்பா பாணி என்ற செல்லப் பெயரும் உண்டு) பரமசிவன், பாம்பை போட்டுக் கொள்ளும் பாணி. செம கட்டை (அதாவது தைரியம் என்கிறார்கள்) எப்போதும் எதையாவது தெரிந்து கொள்ள வேண்டுமென்கின்ற துடிப்பு games ஆகட்டும், படிப்பாகட்டும் ஃபர்ஸ்ட் கிளாஸ்தான். பையன்களை சவாலுக்கிழுக்கும் பாணியில் ஏதாவது செய்து கொண்டே இருப்பார்கள். நீங்கள் என்னதான் காதல் வலை வீசினாலும் கடைசி நிமிஷத்தில் 'அண்ணா' என்கின்ற ரகம். காதலுக்கு லாயக்கில்லை, கல்யாணமா double O.K. சொல்லலாம்.

3. அன்பே வா சரோஜாதேவி பாணி, கழுத்தை சுற்றி போட்டு, ஒரு நுனியை முன்னாலும், இன்னொன்றைப் பின்னாலும் போட்டுக் கொள்பவர்கள். எல்லாம் எனக்குத் தெரியும் என்கின்ற அலட்சியவாதிகள். எதற்கெடுத்தாலும் தேவையில்லாமல் அடுத்தவர் விஷயங்களில் மூக்கை நுழைப்பவர்கள். இவர்களுக்கு ஏகப்பட்ட நண்பர்கள் இருக்கிற மாதிரியிருந்தாலும், அவர்களுக்குப் பின்னால் கமெண்ட் அடிப்பதால் இவர்களுக்கு கெட்ட பெயர் உண்டு. இவர்களின் ஸ்பெஷலிட்டி, என்னதான் கவலையிருந்தாலும் தன்னம்பிக்கையை இழக்க மாட்டார்கள்.

4. வெகு சிரத்தையாகத் தாவணி மாதிரி இரண்டு தோள்களிலும் துப்பட்டாவை பரப்பிக் கொள்பவர்கள். எப்போதுமே இவர்களுக்கு ஒரு வித இன்பீரியாரிட்டி காம்ப்ளக்ஸ். யாராவது தன்னை குட் கேர்ள் என்று சொல்ல மாட்டார்களா என்ற எதிர்பார்ப்பு இருந்து கொண்டே தானிருக்கும். இவர்களை [illegible] சொல்லலாம், [illegible] உருவாவார்கள். (சங்க இலக்கிய தோழி மாதிரி) இவர்களின் பெரும்பாலான நேரம் தூது போவதிலேயே போய்விடுவதால் காதல் எல்லாம் கல்யாணத்திற்குப் பிறகுதானாம்!

5. ஏதாவது ஒரு தோளின் மீது துப்பட்டாவை வெறுமனே போட்டுக் கொள்பவர்கள். காதலிக்க என்னதான் ஆசையிருந்தாலும் இவர்கள் பகிரங்க ரகம் என்பதால் இவர்களைப் பார்த்தால் ஆண்கள் உஷாராகி விடுகின்றனர். வாலாட்டினால் அடிதடியிலும் இறங்கி விடுவதுண்டாம், இவர்களைப் பார்த்தால் ஆண்கள் பத்தடி விலகி நின்றே க்ஷேம சௌக்கியம் விசாரிப்பார்களாம். விஜயசாந்தி, ஆட்டோ ராணி போன்ற பட்டப் பெயர்களும் உண்டாம்.

*(இந்த ஜோசியம் 18 வயதிலிருந்து 25 வயது வரையுள்ள பெண்களுக்குத்தான் பொருந்துமாம்.)*

*— எம். சாந்தி, பொள்ளாச்சி*

# 48 ஆண்டுகளாக

உங்கள் பத்திரங்களைப் பாதுகாக்க
எங்கள் சேவல் மார்க் ஃபைல்கள்
பயன்பட்டு வருவதுபோல
உங்கள் சேமிப்புகளை பாதுகாக்க
எங்கள் டெபாசிட் திட்டம்...

கணக்கிடப்படும்
வட்டி விகிதம் – ஓராண்டுக்கு

# 24%

| மாதங்கள் | ரூ.1000க்கு முதிர்வுத் தொகை | வருடாந்திர வட்டி விகிதம் |
|---|---|---|
| 12 | ரூ. 1260 | 26% |
| 24 | ரூ. 1587 | 29.35% |
| 36 | ரூ. 2000 | 33.33% |
| 48 | ரூ. 2520 | 38% |
| 60 | ரூ. 3175 | 43.5% |

குறைந்தபட்ச டெபாசிட் ரூ.1000

COCK BRAND FILE
TRADE MARK

## MUTHUVEL INDUSTRIES

**Mfrs. of COCK BRAND OFFICE FILES**
**Angappa Chettiar Industrial Complex,**
20-A, Round Road, Post Box No. 32,
DINDIGUL - 624 001. TAMILNADU.

Ph: Off: (0451) 25260 & 27637. Res: 25643 & 23726
Grams: COCKFILE

*உங்கள் முன்னேற்றமே எங்கள் வளர்ச்சி*

ADWAVE/MI/5016




1995 ஏப்ரல் 23
யுவ சித்திரை 10
மலர் : 53
இதழ் : 38

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.



# ஜெ ஆட்சி : நீதிமன்றத் தீர்ப்பு!

முதல்வர் மீது வழக்குத் தொடர சு.சுவாமிக்கு ஆளுனர் அனுமதி அளித்து விட்டதால் அவர் ராஜினாமா செய்து வழக்கைச் சந்திக்க வேண்டும் என்ற நியாயமான கோரிக்கை ஏற்கப்படாதபோது, உயர்நீதி மன்றத்தின் ஒரு தீர்ப்பையொட்டி ஜெயலலிதா ராஜினாமா செய்வார் என்று எதிர்பார்க்க முடியாதுதான். தர்ம நியாயத்தையும் ஜனநாயக மரபுகளையும் தாம் மதிப்பவரல்ல, மிதிப்பவர் என்று ஜெ. மீண்டும் ஒரு முறை நிரூபித்து விட்டார்.

கொடைக்கானலில் ஏழு மாடி ஓட்டல் கட்டுவதற்கான அனுமதி, சுற்றுச் சூழல் பாதுகாப்பு சட்டங்களை மீறி அரசால் வழங்கப்பட்டுள்ளது; சலுகைகள் காட்டப்பட்டுள்ளன என்பதற்கான வழக்கு நீதிமன்றத்தில் இருக்கும் போதே, தனது செயலை நியாயப்படுத்த புதிய சட்டங்களை அரசு உருவாக்கியதும் அவற்றுக்கு நீதிமன்றம் தாற்காலிக தடை விதித்ததும் குறித்து ஏற்கெனவே தலையங்கம் எழுதியுள்ளோம். (காண்க, கல்கி : டிசம்பர் 25, 1994) இந்த வழக்கில் அண்மையில் வழங்கப்பட்ட தீர்ப்பில், “அமைச்சர் சற்றும் யோசனை யின்றி கோப்பில் கையெழுத்துப் போட்டிருக்கிறார்” என்றும் அதன்கீழ் அன்றே முதல்வரும் (கண்ணை மூடிக் கொண்டு) கையெழுத்திட்டிருக்கிறார் என்றும்




நீதிபதிகள் கருத்துத் தெரிவித்து உள்ளனர். திருக்குறளை வேறு மேற்கோள் காட்டியுள்ளனர், கொடுங்கோன்மை அதிகாரத்திலிருந்து! இதற்குப் பிறகும் முதல்வர் அசைந்து கொடுக்காமல் கமுக்கமாக பதவி நாற்காலியில் ஒட்டிக் கொண்டிருக்கிறார் என்றால், அவரும் அமைச்சரும் சற்றும் யோசிக்காமல் கையெழுத்துப் போடவில்லை; சுயலாப காரணங்களுக்காக நன்கு யோசித்துத் தான் கையெழுத்துப் போட்டிருக்கிறார்கள் என்ற முடிவுக்கே நாம் வர இயலும்.

## மொரார்ஜியை அவமதித்த அரசு!

சர்ச்சைக்குரிய பல வரிகளை விதித்து மக்களுக்கு மனக்கசப்பை ஏற்படுத்தியவர்தாம் மொரார்ஜிதேசாய். ஆயினும் அரசியலில் கண்டிப்பானவர், பண்பாளர், நேர்மையாளர், எளிமையின் உறைவிடம், உழைப்புக்கு அஞ்சாதவர் என்றெல்லாம் நற்பெயரும் அவருக்கு உண்டு. தவறு என்றால் சொந்த மகனாக இருப்பினும் தட்டிக் கேட்கத் தயங்காதவர். ஆடம்பரம், வீண் செலவுகளின்

> “வாரத்தில் நாலைந்து நாள் அரசு அலுவலகங்கள், தபால் நிலையங்கள், வங்கிகள் எல்லாம் மூடிக்கிடந்தால் தேசப் பொருளாதாரம் என்ன ஆவது? குட்டிச்சுவர்தான்!”




பரம விரோதி. உண்டி சுருக்கி ஆரோக்கியம் காத்தவர். ரத்தினச் சுருக்கமாகக் கூறுவதெனில் உண்மையான காந்தியவாதி.

அப்படிப்பட்டவர் காலமானதற்கு இரண்டு நாள் லீவு விட்டு மக்களிடம் சோம்பலை வளர்த்தது மொரார்ஜியையே அவமதித்ததாகும். கடும் உழைப்பே அவருக்கு நாம் செலுத்தக்கூடிய அஞ்சலி. ஒரு ஞாயிற்றுக்கிழமை நாம் வேலை செய்தால் அவர் ஆன்மா குளிரும். ஆனால் நேர் மாறாக, செவ்வாய், புதன் தேசாய்க்காக லீவு; வியாழன் வடக்கே மகாவீர் ஜெயந்தி லீவு; வெள்ளி குட் ஃபிரைடே லீவு. இப்படி வாரத்தில் நாலைந்து நாள் அரசு அலுவலகங்கள், தபால் நிலையங்கள், வங்கிகள் எல்லாம் மூடிக்கிடந்தால் தேசப் பொருளாதாரம் என்ன ஆவது? குட்டிச்சுவர்தான்!

## கூடிக் கலைந்தார்கள்!

தலைப்பு அமரர் 'கல்கி'யுடையது. முன்னொரு சமயம் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடி உருப்படியாக ஒரு முடிவுக்கும் வராமல் கலைந்ததை இப்படி தலைப்பிட்டுத்தான் சாடினார். தற்போது சரித்திரம் திரும்பியிருக்கிறது. மாநிலத் தேர்தல்களில் காங்கிரஸ் அடைந்துள்ள வரலாறு காணாத தோல்வி களை அலசி ஆராய அகில இந்திய காங்கிரஸ் செயற்குழு கூடிக் கலைந்தது! 'என்ன செய்ய வேண்டுமோ செய்து கொள்ளுங்கள்' என்று எல்லா பொறுப்பு களையும் அதிகாரங்களையும் பிரதமரிடம் ஒப்படைத்து விட்டு 'நமக்கேன் வம்பு' என்று வீடு போய்ச் சேர்ந்தார்கள். பிரதமர் வழக்கம்போல் 'சும்மா இருப்பதே சுகம்' என்ற பல்லவியை மௌன கீதமாகப் பாடிக் கொண்டிருக்கிறார். கேட்டு மெய் சிலிர்ப்போமாக!

# Kalki Shopping Page

## RANI SAREES
### MADURAI - 12
### R.A.M

இந்தத் துணி லேபிலை கவனித்து வாங்குங்கள்.

பெங்கால் காட்டன் சாரீஸ் நிறைய கலர்கள் நிறைய டிசைன்கள் 10% தள்ளுபடி உண்டு.

**மதுரை டெக்ஸ்டைல்ஸ்**

2, சிவப்பிரகாசம் ரோடு,
பாண்டிபஜார்,
சென்னை - 17
(காய்கறி மார்கெட் அருகில்)




## NEWLOOK TAILORS

WE ACCEPT CREDIT CARDS

Opp.: T. Nagar Bus Terminus
Madras - 17. Phone : 434 34 48
NO BRANCHES
We specialise in Bridegroom's dress to make the bride proud.

இன்று சிறு முதலீடு! நாளை பல இலட்சங்கள்!!

நீங்கள் தனியாகவோ, கூட்டாகவோ சேர்ந்து

**ரொக்கத்தில் 4 மனை வாங்கினால் 1 (ஒரு) மனை இலவசம்!**

தேக்கு, தென்னை, மா மரங்களுடன் மனை உங்களுக்கே

- எல்லா வசதிகளுடன் சென்னையிலிருந்து (37கி.மீ) பஸ் ரூட்டில் மனைகள்.
- ரூ. 190 முதல் ரூ. 300 வரை 4 திட்டங்கள் 50 மாதங்களே
- பிரதி மாதமும் ஆறுதல் பரிசாக வீட்டு உபயோகப் பொருட்கள்.
- தவணையில் மனைப் பரிசு பெற்றவர் தவணை கட்ட வேண்டாம்.

*** பம்பர் பரிசு ரூ. 50,000, கலர் டீ.வி., பிரிட்ஜ்***

உங்கள் வாரிசுகளை லட்சாதிபதியாக்க இன்றே சேருங்கள்

- மேலும் சில இடங்களில் அப்ரூவ்டு மனைகள் உள்ளன
- ஏஜெண்டுகள் அணுகலாம்

**ஓம் சக்தி கணேஷ் எஸ்டேட்ஸ் (Regd.)**

52, குருவப்ப மேஸ்திரி தெரு, (மார்க்கெட் அருகில்)
அயன்புரம், சென்னை - 600 023

# Kalki Shopping Page



# என் பொண்டாட்டி நல்லவ

**த**மிழ் சினிமாவின் சிரஞ்சீவி சப்ஜெக்ட்களில் ஒன்று 'மங்கம்மா சபதம்'. காலத்துக்கேற்ப அடிதடி, சென்டி மெண்ட், தளுக்கு குலுக்கு எல்லாம் சேர்த் தால் கிடைப்பதுதான் எ.பொ.ந. ஆனா லும் சீட் நுனியில் உட்கார வைக்கிறார் கள். பிரமிக்க வைக்கும் திரைக்கதை வேகம்.

வில்லனிக் ஹீரோவாக நெப்போலி யன். ஈடுகொடுக்கும் குஷ்பு. நல்ல காம்பி னேஷன். கடைசியில் நெப்போலியன் மனம் திருந்த, குஷ்பு காலைத் தொட்டு, தமிழ்ப் பண்பாட்டை மீண்டும் பட்டொளி வீசிப் பறக்க விடுகிறார்.

பாட்டுப் பாடும் ஆசை நெப்போலியனை விட்டு வைக்கவில்லை. தத்துவ முத்துப் பாடல் கள். டப்பாங்குத்து என்னும் தொன்மை யான இசை வடிவத்தை அண்ணன் தேனிசைத் தென்றல் என்னமாய் மெருகேற்றுகிறார்!

இன்னொரு புல்லரிப்பு செந்தில், வடிவேலு காமெடி. போதாக்குறைக்கு கோவை சரளா, ஒய்.ஜி. மகேந்திரனும் உண்டு. சிரிப்பு வந்தால் சரி.

படத்தில் நிறைய பேருக்குத் திடீர் திடீரென ஞானோதயங்கள் பிறக்கின்றன. கெட்டவர்கள் நல்லவர்களாகி விடுகிறார் கள். அது எப்படியென்றுதான் தெரிய வில்லை. தேவையில்லாத விஷயங்களில் ஒன்று: 'அப்பன் என்ன' ப்பாட்டில், சிறு பையன்கள், சாராயத்தால் கெட்டுப் போவதை விலாவாரியாகக் காட்டியிருப் பது. செய்முறை விளக்கங்கள் அநா வசியம். மற்றபடி, இது பெண்களுக்கான படம். அதாவது, பிழியப் பிழிய சென்ட்டி மென்ட்.

— துளசி

## பள்ளிக்கூடங்களில் பி.டி. மாஸ்டர்களின் பணி என்ன?

**பி**ரேயருக்கு லேட்டாக வரும் பையன் களை முட்டிக்கு முட்டி தட்டுவதும், விழாக் காலங்களில் லெப்ட்-ரைட் போட வெயிலில் பயிற்சி அளிப்பதும் தானா?

நுங்கம்பாக்கம் மேல்நிலைப் பள்ளி உடற் கல்வி ஆசிரியர் ஜோஸ்லி சாம்தாஸ் சொன் னார் :

''அதெல்லாம் 20 வருஷங்களுக்கு முந்தின கதை. அப்போது மிலிட்டரியி லிருந்து ஓய்வு பெற்றவர்களை, டிரில் மாஸ்டர் என்று பதவி கொடுத்து பள்ளிகளில் வைத்திருந்தார்கள்.



விளையாட்டில் ஆர்வம் காட்டி னால் படிப்பு பாழாகி விடும் என்கிற காலமெல்லாம் மலையேறி விட்டது. இன்றைக்கு பி.டி. மாஸ்டர் ஆக வேணு மென்றால் முறையாகப் படித்து, பரீட்சை எழுதி, பயிற்சி பெற வேண்டும்'' என்கிறார் இவர்.

''இன்றைய சூழ்நிலையில் பள்ளி மாண வர்களில், வசதியற்ற, சமூகத்தில் நலிந்த பிரிவிலிருந்து வருகிற பையன்களோடு ஒப் பிட்டால் வசதி பெற்றவர்கள் விளையாட்டுத் துறையில் அவ்வளவாக சாதனை படைக்கிற தில்லை'' என்கிறார் சாம்தாஸ்.

ஆச்சர்யமாயில்லை? ''சரியான சாப்பாட் டுக்குக் கூட வழியில்லாமல், ரன்னிங் ஷூ, ட்ராக் ஸூட் இவைகளுக்கெல்லாம் வழியற்ற ஏழைப் பையன்களுக்கு இருக்கிற 'ஸ்டா மினா' கையில் குளுகோன் - டீ சகிதம் காரில் வந்து இறங்குகிறவர்களிடம் இல்லை'' என்கிறார் இந்த இருபது வருட அனுப வஸ்தர்.

— ப்ரியன்



• தேர்வும் சுலபமில்லை; பணியும் சுலபமில்லை

# அம்பயர் ஆவது அத்தனை சுலபமா?

கிரவுண்டுக்குள் ஏதாவது நகர்ந்தால் அது சைடு ஸ்கிரீன். நகரா விட்டால் என் கணவர்!"

தன் அசாத்ய உருவம் மூலம் பிரபலமாகி விட்ட அம்பயர் ஸ்வரூப்கிஷன் பற்றித்தான் அவர் மனைவி ஒரு தரம் இப்படிக் குறிப்பிட்டார்!

நல்ல ஜோக்தான். ஆனால் அம்பயரா வதற்கு எத்தனை கஷ்டப்பட வேண்டும் தெரியுமா?

அப்படி என்ன கஷ்டம்?

1972முதல் தமிழ்நாடு கிரிக்கெட் குழு சார்பில் அம்பயராகப் பணியாற்றும் ஆர். ராதாகிருஷ்ணனிடம் கேட்டோம். மாநில அளவில் அம்பயர் செலக்ஷன் போர்டிலும் இடம் பெற்றிருக்கும் அவர் கூறியவற்றின் தொகுப்பு இங்கே:

அம்பயர்களில் இரண்டு பிரிவு உண்டு. (கவனம்: கோஷ்டி அல்ல!) மாநில அளவு அம்பயர்கள், தேசிய அளவு அம் பயர்கள்.



• ஸ்வரூப் கிஷன்

கிரிக்கெட் விதிகளைக் கரைத்துக் குடித்துவிட்டு. (குண்டு புஸ்தகமெல்லாம் இருக்கு பார்?) இஷ்ட தெய்வங்களை வேண்டிக் கொண்டு முதலில் ஒரு என்ட்ரன்ஸ் எக்ஸாம் எழுத வேண்டும். கொஸ்டின் பேப்பர் அவுட் ஆகிற சாத்தியங்களுக்கெல்லாம் சான்ஸே இல்லை.) ஒரு சின்னத் தவறு கூட வாய்ப்பைப் பறித்து விடும். (செமை போட்டி யார்!) இந்த ரிட்டன் எக்ஸாமில் தொண்ணூறு சதத்துக்கு மேல் எடுத்தால்தான் அடுத்த கட்ட பிராக்டிகல் தேர்வு.

இதற்காக ஸ்பெஷலாக ஒரு கிரிக்கெட் போட்டி நடத்துவார்கள். ஆட்டக்காரர்களுக்கு நிறைய தப்பு செய்ய அட்வைஸ் செய்திருப்பார்கள். (நம்மாளுங்களுக்குச் சொல்லணுங்களா?) அம்பயர் எத்தனை உன்னிப்பாகக் கவனித்துத் [illegible] என்பதில் இருக்கிறது விஷயம். (அதாவது அவரது தலை விதி!)

இந்த 'பிராக்டிகல்' தேர்வு தேசிய அளவில் மட்டுமே நடந்து வந்தது. சமீபமாகத்தான் மாநிலத் தேர்வு முறைகளிலும் நுழைந்திருக்கிறது.

இடையாக ஒரு நேர்முகத் தேர்வு. கேள்விகளால் வேள்வி செய்யும் வழுக்கைத் தலை நீதி வேந்தர்களை திருப்தி செய்தாக வேண்டும்.

இந்த அம்பயர் தேர்வுக்கு அப்ளை பண்ணுபவர் ஓர் ஆட்டக்காரராகத்தான் இருக்க வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை. (இருந்தால் தேசிய அளவு தேர்வில் சலுகை உண்டு!) ஸ்கூல் ஃபைனல் முடித்த யார் வேணுமானாலும் இதற்கு அப்ளை பண்ணலாம். (தேறுவதுதான் சாமி கஷ்டம்!)

செலக்ஷன் ஆகிவிட்டால், ஒரு நாள் போட்டிக்கு ரூ.150 சம்பளம். லீவ் நாள் என்றால் 110தான். (பார்ட் டைமாகக்கூட பண்ணலாங்க.) தேசிய லெவல் போட்டிகளுக்கு ஒரு நாளைக்கு 500 சம்பளம். (ஆடறவங்களுக்கு மட்டும் ஆயிரக் கணக்கில்! என்ன அக்ரமம்!) தேசிய அளவில், அம்பயர்களின் தரம் அவ்வப்போது துல்லியமாகக் கணிக்க, கவனிக்கப்படுகிறது. ஒவ்வொரு பந்தய முடிவிலும் கேப்டன்களும் மானேஜர்களும் அம்பயரைப் பற்றிய ரிப்போர்ட்டை கிரிக்கெட் போர்டுக்கு அளிப்பார்கள்.

"யாரைப் பற்றித் தவறான ரிப்போர்ட் வருவதில்லையோ, அவர் திறமையான அம்பயர்தான்" என்பது மாநில லெவல் கணிப்பு.

-ஜி.எஸ்.எஸ்.

# மிஸ் செஸ் இந்தியா!

**ப**தினாறு வயது. ஆலின் முகம். ஐஸ்கிரீம் குரல். லேஸர் பார்வை. நட்சத்திர ஸ்மைல். அவர் பெயர் விஜயலட்சுமி. கே.கே. நகர் கிருஷ்ணசுவாமி மெட்ரிக் பள்ளியில் பிளஸ் ஒன். 'அதனாலென்ன?' என்போருக்கு அடுத்த வரியில் விடை... :

இந்த வருஷ தேசிய ஜூனியர் செஸ் சாம்பியன், இந்த செந்தமிழ் நாட்டுச் சின்னப் பெண்.

இருபத்தி நாலு மணி நேரம் போதவில்லை; செஸ் பற்றிச் சிந்திக்க. நின்றால், நடந்தால், கிடந்தால், எழுந்தால், பேசினால், சுவாசித்தால் - செஸ், செஸ், செஸ். சர்வ நேரமும் சதுரங்க சிந்தனை. நொடி கிடைத்தால் விடுகிற தில்லை. செஸ் மூவ்மெண்ட்ஸ் அடங்கின புஸ்தகங்களை வைத்துக் கொண்டு, தனக்குத் தானே இரண்டு புறமும் ஆடிப் பார்த்துக் கொள்கிறார்.



"ட்ரக் மாதிரிதான் இதுவும். பழகி விட்டால் விடாது!"

அப்பா சுப்பராமன். பல்லவன் ஊழியர். செஸ் வெறியர். மகளை உலகளவில் செஸ் ராணியாக்க வெகு மும்முரமாக உழைக்கும் மிடில் கிளாஸ் உழைப்பாளி.

"சிக்கல் இங்கேதான். செஸ், வெகு காஸ்ட்லி கேம். ஒரு முழுமையான செஸ் பிளேயரை உருவாக்க 5-10 லட்சம் ரூபாய் செலவாகும். இத்துறை புத்தகங்கள் மிக காஸ்ட்லியான அத்தியாவசியங்கள். ஆறு மாசத்துக்கு ஒருதரம் வருகிற செஸ் ஜர்னல் ரூபா ஆயிரம். தவிர, மெண்டல் டென்ஷன் தணிக்க, போஷாக்கு ஊட்ட உணவு வகையில் மட்டும் நாளுக்கு நூறு ஆகிறது. மிடில் கிளாஸ் போராட்டங்களுக்கு நடுவே இவை சுகமான சுமைகள்."

அப்பா பேச, தலைகுனிந்து சிரிக்கும் விஜி, நான்கு வயதில் ஆட ஆரம்பித்தவர். TAL Chess club-ல் சேர்ந்து பயின்ற பாலகாண்ட நினைவுகளை விழிவிரியச் சொல்கிறார்.

"இது வெறும் விளையாட்டல்ல; யுத்தம்! அந்த எண்ணம் இருந்தாலொழிய சாதனைகள் சாத்திய மில்லை."

சொல்வது மட்டுமில்லை... விஜிக்கு வேறு பொழுதுபோக்குகளும் இல்லை. சினிமா, ட்ராமா, நண்பிகளுடன் அரட்டை, டீவி, கேபிள்... ஏதும் நஹி. செஸ், செஸ், செஸ் மட்டுமே!

"சின்ன வயதில் அதலெடிக்ஸில் ஆர்வமிருந்தது. செஸ்ஸுக்கு வந்தபின் போயே போச்!"

எட்டு வயதில், உலகப் புகழ் வால்டர் அரன் ஸிபியா (கென்யா)வுக்குத் தண்ணி காட்டியிருக்கிறார் விஜி. அரான்ஸிபியாவை

வெல்வது சாதாரணமல்ல. சில நிமிஷங்களில் எதிராளியைத் தோற்கடிப்பவர் அவர். அவரையே மணிக்கணக்கில் திணறடித்து அந்த அளவில் வெற்றிக் கொடி பறக்க விட்டிருக்கிறார் விஜி.

"பிற விளையாட்டுத் துறைகள் போல செஸ்காரர்கள் நட்பாகப் பழக மாட்டார்கள். ஹலோ சொல்ல ஆயிரம் யோசிப்பார்கள். ஒரு ஸ்மைல்? பர்ஸனலாக ஒரு வார்த்தை? சான்ஸே இல்லை. எப்படி எதிராளியைக் கவிழ்ப்பது என்பதில் ஏக கவனம்!"

விஜி சொன்னதுதான். ஆனால் அவரைப் பார்த்தால் அப்படித் தெரியவில்லை. கொஞ்சம் ஜாலி டைப் மாதிரிதான் தெரிகிறது. (Am I correct விஜி!)

"ஆனந்தோடு ஆடியிருக்கிறேன். உலகிலேயே Fastest Player அவர் தான்!"

விஜிக்குப் பிடித்த செஸ் பிளேயர் காஸ்பரோவ். "அவர் சாம்பியன் என்பதால் அல்ல; அவரது மூவ்மெண்ட்கள் வெகு அழகாக இருக்கும்!"

94-வது வருஷத்தின் அத்தனை தேசிய சாம்பியன் பட்டங்களும் விஜியிடம்தான் உள்ளன. லேட்டஸ்ட் சாதனைக்குப் பரிசாக, பள்ளியில் fees குறைத்திருக்கிறார்களாம்.

"அரசு ஏதும் செய்யக் கூடாதா?" என்று அப்பாவியாகக் கேட்கிறார்.

"ஒரு கம்ப்யூட்டர் இருந்தால் ஆடிப் பார்க்க வசதியாக இருக்கும். யாரும் ஸ்பான்ஸர் செய்தால் இன்னும் சாதிக்கலாம்! உலக சாம்பியனாவது என் கனவு!"

விஜி சொன்ன பிறிதொரு விஷயம் யோசிக்க வைத்தது. தேசிய சாம்பியனாக முடிசூடியதற்குக் கிடைத்தது பத்தாயிரம் மட்டுமே.

"உலகில் வேறெந்த நாட்டையும் விட இங்கு பரிசுத் தொகை - செஸ்ஸுக்கு மிகக் குறைவு. மேல்நாடுகளில் தேசிய சாம்பியன் எனில் 2-3 லட்சமாவது பரிசு கிடைக்கும். அது, மேற்கொண்டு முன்னேற உதவுமல்லவா?"

அதலெடிக் வீராங்கனைக்கு அள்ளிக் கொடுத்த 'அம்மா', அகில இந்திய சாம்பியனுக்குக் கிள்ளிக் கொடுக்காமலா போய் விடுவார்?

**— ஔரங்கசீப்**

அட்டை வண்ணப்படம், படம் : **யோகா**

# டைட்டில் பழசு; நடிப்பவர் புதுசு!

**பழைய தமிழ்ப் படங்களின் பெயர்களைப் புதிய படங்களுக்குச் சூட்டுவது இப்போதைய ஃபாஷன். அந்த வகையில் நமது தயாரிப்புகள் டைட்டில் பழசு; நட்சத்திரங்கள் புதுசு!**



சசிகலா - நடராஜன் இணைந்து வழங்கும்
**"அனுபவி ராஜா அனுபவி"**



ஜெயலலிதா - சென்னாரெட்டி மோதல் காட்சிகள் நிறைந்த படம்
**"இரு துருவம்"**




சூப்பர் ஸ்டார் டி. என். சேஷன் நடிக்கும் ஆக்ஷன் படம்
"நான் ஆணையிட்டால்"



பால் தாக்கரே - அத்வானி இருவரும் முதல் முறையாய் இணைந்து நடிக்கும்
"தேன் நிலவு"



நரசிம்மராவ் பொறுமையுடன் வழங்கும்
"சவாலே சமாளி"
- முழு நீள ஸ்லோமோஷன் படம்

மே. வங்காள மூவிஸ் வெற்றிப் படைப்பு.
ஜோதிபாசு நடிக்கும்
"பக்தமார்க்கண்டேயா."



சந்தனக் கடத்தல் வீரப்பன் திறமுடன் நடிக்கும் "மலைக்கள்ளன்".
- திரில்லிங்கான மாதேஸ்வரமலை மோதல் காட்சிகளைக் காணத் தவறாதீர்கள்.



பா. ம. கா. பிக்சர்ஸ் தயாரிப்பு
"கூண்டுக் கிளி"
கிளைமாக்ஸில் ஹீரோயினின் உணர்ச்சி பொங்கும் சாபத்தைக் காணத் தவறாதீர்கள்.



கற்பனை : மௌனஸ்ரீ



ஆறுமுகம் அவன் தோட்டத்தில் ஏலக்காய் செடியைச் சுற்றி மண் கொத்திக் கொண்டிருக்கிற போது, நாச்சியப்பச் செட்டியார் இறந்து விட்டார் என்கிற செய்தி வந்தது.

எந்த மரணமும் மரணமடைந்தவர் வாழ்க்கையை நினைவுபடுத்துவதோடு முடிந்து விடுவதில்லை. எல்லா மரணச் செய்தியும் கேட்பவரின் மரணத்தையும் ஞாபகப் படுத்துகிறது. இன்று எவ்விதமாக ஒருவர் மரணத்தைக் கேட்டு அதிர்ந்து போயிருக்கிறேனோ அதே விதமாய் என் மரணச் செய்தியும் யாராவது கேட்டு அதிர்ந்து போய் நிற்கக்கூடும்.

"ஆறுமுகம் இறந்து விட்டானா" என்று கேட்டு நான் செய்த நல்லதையும் கெட்டதையும் நினைவுபடுத்திக் கொள்ளக்கூடும். நாச்சியப்பச் செட்டியாரின் மரணம் அப்படித்தான் யோசிக்க வைத்தது. அவர் செய்த நல்லதையும் கெட்டதையும் ஞாபகப்படுத்தியது.

"நான் இருக்கேன் ஆறுமுகம். பொறந்ததிலேர்ந்து தரையில இருந்துட்டு டக்குன்னு மலைக்கு மாறினா ஒரு கலவரம் இருக்கத் தான் செய்யும். எத்தினி நேரம் மரத்தையும் புதரையும் பார்த்துட்டுருக்கறதுன்னு தோணும். நெரிசல்ல புழங்கிட்டு அடுத்த மனுஷாளைப் பார்க்க ரெண்டு கிலோ மீட்டர் நடக்கணும்னா ரொம்ப அலுப்பா இருக்கும். இதெல்லாம் பத்து மாசத்துல பழகிடும்.

சின்ன புள்ளைக்கு ரத்தம் ஊர்ற மாதிரி இந்தத் தண்ணி, இந்தக் குளிரு, இந்த வாசனை உடம்பில ஊரணும். இத நீயாதான் பழகணும். மத்தபடி காசு கஷ்டம்னா நாச்சியப்பண்ட வா."

"மாசம் பொறந்தா சம்பளம்னு மலைல இருக்கற கவர்மென்ட் ஆளுக்குக் கிடைக்காது. சம்பளம் தரைலேர்ந்து வரணும். மண் சரிவு, மழை அதிகம் எதாவது சாக்கு சொல்லுவாங்க. அஞ்சாறு நாள் தள்ளிக் கொடுப்பாங்க. நீ சேவை செய்யணும்னு மலைக்கு வரலை. இங்குள்ள பசங்களுக்கு படிப்பு சொல்லித் தரணும்னு வந்திருக்கவன். உன்னைய வுட்டுர மாட்டோம்."

நாச்சியப்பன் தோளில் கை போட்டுக் கொண்டு பேசியது ஞாபகம் வந்தது. ஆனால் ஆறுமுகம் சேவை மனப்பான்மையோடு மட்டும் வரவில்லை. ஜெயந்தியைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்றுதான் மலைக்கு வந்தான்.

ஆறுமுகம் ஹரிஜன் என்றுதான் அரசாங்கத்தில் பல சலுகை கிடைத்தது. அல்லி நகரத்தில் ஆசிரியராய்ப் பதவி ஏற்ற ஐந்தாவது வருடத்தில் உதவித் தலைமை ஆசிரியராய் அவன் ஜாதி, உயர்வு வாங்கிக் கொடுத்தது. மற்ற ஜாதி ஆசிரியர்களுக்கு அது மிகுந்த பொறாமையைக் கொடுத்தது. அவன் பதவி உயர்வை எதிர்த்து அவர்களால் வழக்காட முடியாது. அவனை எதிர்த்து இழிவுபடுத்துகிறார்கள் என்று ஒரு அஞ்சலட்டையில் எழுதிப் போட்டால் உடனே விசாரணை துவங்குவார்கள். பதவி இறக்கம் அல்லது பதவி நீக்கம் செய்வார்கள். உயர்ஜாதிக் கூட்டம் அவனை வேறுவிதமாய்த் தாக்கியது.

"வாழ்த்துக்கள், ஆறுமுகம். அஞ்சு வருஷத்துல உதவி தலைமையாசிரியராயிட்டீங்க. ஜாதி தவிரவும் உங்களுக்கு தகுதி இருக்கு. எம்.ஏ. ஆங்கில இலக்கியம் படிச்சது பெரிய விஷயம். இந்தத் தகுதிதான் உங்களுக்கு பதவி உயர்வு கொடுத்தது. இங்கிலீஷ் நல்லா எழுதறீங்க. பேசக் கத்துக்கங்க. அதுவும் முக்கியம்" என்று பாராட்டி விட்டு அவள் கூடவே வேலை செய்த ஜெயந்தியை அவன் நேசித்த போது, அந்த நேசம் வெளியே தெரிந்த போது, அவனால் பாதிக்கப்பட்ட போது, கடும் எதிர்ப்பு தெரிவித்தார்கள். பிரச்னையைப் பெரிதாக்கினார்கள்.

"அவ இட்லியை சாம்பார்ல தோச்சு தோச்சு ஊட்ட இவன் அவ மடியில படுத்துட்டு திங்கறான். பள்ளிக்கூடம் முடிஞ்சு பேப்பர் திருத்தறேன்னு ரெண்டு பேரும் உக்காந்துக்கறாங்க. மாத்தி மாத்தி சினிமா பாட்டுப் பாடறாங்க."

"இதுல பெரிய அசிங்கம் என்னா தெரியுமா... ரெண்டு பசங்கள வாசல்ல காவலுக்கு நிக்க வைக்கிறதுதான். நாங்க வுடலையே. கொல்லைப்புற சுவரு ஏறி குதிச்சு, அவங்க பேசினது, பாடினது எல்லாம் ரெக்கார்ட் பண்ணிட்டோம். கேசட் சாட்சியா இருக்குய்யா. முத்தம் குடுக்கற சத்தம் கூட இருக்கு. கவர்மென்ட் தூக்கி விட்டுது. எங்களைத் தாண்டிப் போய் தலைல உக்காந்துட்ட. வுட்டுருவமா... நீ ஹரிஜன். உனக்கு செவப்புத் தோலா உயர்ந்த ஜாதிப் பொண்ணு கேக்குதா, உன்னை ஒரு வழி பண்ணாத வுட்டுருவமா?" உயர்ஜாதி கொக்கரித்தது.

ஆறுமுகம் மிரண்டான். யாராவது ஆதரவு தர மாட்டார்களா என்று ஏங்கினான். ஜாதி இல்லை என்று பேசியவர்கள் எல்லாம் அதைச் செயல்படுத்த முற்படும் போது பின்வாங்கினார்கள். ஜெயந்தி என்ன ஜாதி என்று ஆராய்ந்தார்கள். "ஜெயந்தியோட அம்மா பிராமின், அப்பா நாயர்... மதுரை மண்ணும், மலையாளத்து மண்ணும் கலந்த பொம்மை.

# என்னுயிரும் பல்லவோ

பாலகுமாரன்

திருதிருன்னு ஒரு உடம்பு. துறுதுறுன்னு ஒரு பார்வை - தெருவுல நடந்து போச்சுன்னா நிக்கிற அத்தினி பேரும் பாதாதிகேசம் பார்க்காது இருக்க மாட்டான். புடவைய இறுக்கிக் கட்டிக்கிட்டு ஜெயந்தி பூப்பந்து ஆடும் பாருங்க... இத வேடிக்கை பாக்கறதத் தவிர வேற வேலையே கிடையாதுன்னு நிப்பாங்க. எதிர் சைடு ஆடறதுக்கு போட்டி போடுவாங்க. அப்பதான நல்லா பாக்கலாம். கூட ஆடறவன் நொந்துருவான். பந்தே வராது. எல்லா பந்தும் ஜெயந்திக்கே போகும். அப்பத்தான அவ எகிறி எகிறி அடிக்கிறத வேடிக்கை பார்க்கலாம்.

ஜெயந்தி பாக்கறதுக்கும் பிராமின். படிப்பிலயும் பிராமின். ஆனா சர்டிபிகேட் பிரகாரம் நாயர். பேக்வர்ட் கிளாஸ். படிப்பு முடிச்சவுடன் தடுக்குன்னு வேலை கிடைச்சுது. கவர்மெண்ட் சம்பளம். நிரந்தரமான வேலை. நல்ல அழகு. நிறைஞ்ச படிப்பு. வூடு வாசல், நகை நட்டு எல்லாம் இருக்கு. ஆனா கல்யாணம் ஆவலை. ஏன்...? அப்பா நாயர். அம்மா பிராமின். அப்பா கேரளா. அம்மா தமிழ்நாடு.

வச்சுக்கறேன்னு சொல்லி ஆளுங்க வந்தாங்களே தவிர கல்யாணம் செய்யறதா எவனும் வரலை. ஏகப்பட்ட விளம்பரம் கொடுத்தும் எவனும் சீந்தலை. ஒருத்தன் வந்தான். தஞ்சாவூர் பிராமின்னு தபால் போட்டிருந்தான். ஆத்தாளுக்கும் பொண்ணுக்கும் ஒரே சந்தோஷம். முன்ன பின்ன இருந்தாலும் முடிச்சிரலாம்னு ஒரு எண்ணம். வந்தவன் கம்பு ஊனிட்டு வந்தான். ஆத்தாளும் பொண்ணும் அதிர்ந்து போயிட்டாங்க. வந்தவனுக்கு பதினோரு வயசிலேர்ந்து சக்கரை வியாதியாம். இருபத்தோரு வயசுல கால்ல புண்ணு வந்து முழங்கால் வரைக்கும் வெட்டிப் போட்டுட்டாங்களாம். இந்தக் குறை இருக்கறதாலதான் உங்க குறை பெரிசா தெரியலைன்னான். அடுத்த வாரமே கல்யாணம் வச்சுக்கலாம்னு அவசரப்பட்டான். ஜெயந்தி ஆடிப் போச்சு. தன்னை யாருமே உண்மையா மதிக்கலையேன்னு பயந்துடுச்சு, இந்த துக்கத்த வெளிய சொல்லக் கூட ஆள் இலலையேன்னு....

ஆறுமுகம் அவளுக்கு ஒரு லெட்டர் எழுதினான். அது லவ் லெட்டர் இல்லை. ஒரு கட்டுரை. 'பிரிவினை அற்ற உலகம்'னு அந்தக் கட்டுரைக்குப் பேரு. ஆயிரம் லவ் லெட்டர் செய்யாத விஷயத்தை அந்த ஒத்தக் கட்டுரை செய்தது. இந்த உலகத்துலயே ஆறுமுகம் ஒருத்தன்தான் ஆம்பளைன்னு ஜெயந்தியை நினைக்க வச்சுது. அப்புறம் என்னா.... லவ்வுதான்.

**"குறைந்த பட்ஜெட்ல 'குளுகுளு' சூழ்நிலையில் பக்கத்திலேயே படம் எடுக்கிற மாதிரி ஒரு லொகேஷன் சொல்லுங்களேன்!"**

**"ஃபிரிஜ்?"**

மத்த ஆளுங்களுக்கு இதுல ரெண்டு கஷ்டம். ஜெயந்தி பேட்மிட்டன் ஆட மாட்டாளேன்னு ஒரு கஷ்டம். இத்தினி அழகான ஜெயந்தியை இந்த ஆறுமுகம் கட்டிக்கப் போறானேன்னு ஒரு கஷ்டம்.

அவங்க பள்ளிக்கூடத்துல தனியா பாடினதையும் பேசினதையும் டேப் எடுத்தானே... அந்தாளுக்கு இருபது வருஷ சர்வீஸ். உதவி தலைமை ஆசிரியர் பதவி அவருக்குத்தான் வந்திருக்கணும்.

ஆறுமுகம் அவரிடம் நேரே போனான். கைகூப்பினான். "நான் நகந்துர்றேங்க. தயவு செஞ்சு கேசட் குடுத்துருங்க. எங்க வாழ்க்கையக் கலைச்சுராதீங்க."

"நகர்ந்துக்கறேன்னா என்ன அர்த்தம்?"

"இந்த வேலைய ரிஸைன் பண்ணிடறேன். ஜெயந்தியோட எங்கனா போயிடறேன்."

அவருக்கு அதிர்ச்சியா இருந்தது.

"அரசாங்க வேலைய விட அந்தப் பொம்பளை அத்தினி முக்கியமா?"

"ஆமாங்க."

"ஏன்?"

"அதுவும் பாவப்பட்டது. நானும் பாவப்பட்டவன். இந்த உலகம் அவளையும் அசிங்கப்படுத்துது. என்னையும் அசிங்கப்படுத்துது. நாங்க கைகோத்துக்கறது எங்களுக்கும் நல்லது. நாட்டுக்கும் நல்லது. கீழ்ஜாதின்னு நீங்க சொல்றவங்களுக்கு உண்மையான மரியாதை கிடைக்கணும்னா இந்த மாதிரி கலப்புத் திருமணம் அவசியம். எங்களுக்கு பொறக்கற குழந்தை எந்த ஜாதியும் இல்லாத இருக்கும்."

"சரி... எப்ப போற...?"

"ஒரு மாசம் டைம் கொடுங்க."

அவனும், அவளும் தீவிரமாய் யோசித்தார்கள். பள்ளிகள் இல்லாத இடங்களில் பள்ளிகள் ஆரம்பிக்க அரசு முயன்று கொண்டிருந்தது. தமிழ்நாட்டின் எல்லையில் போடிமெட்டு என்கிற இடத்தில் பள்ளிக்கூடக் கட்டடம் இருந்தும் அங்கு வேலை செய்ய ஆசிரியர் யாரும் முன்வரவில்லை. ஆசிரியர் இல்லாததால் மாணவர்கள் வரவில்லை. மாணவர்களே அங்கு இல்லை என்று பொய்க் காரணம் காட்டப்பட்டது. அந்தப் பள்ளிக்கூடக் கட்டடத்தில் ஒரு மக்கட



யும், சீட்டாடுகிற சாராய மடமும் இயங்கி வந்தன.

போடிமெட்டுக்கு வேலைக்கு போவதாய் மனு எழுதிக் கொண்டு ஆறுமுகம் ஜெயந்தியோடு சென்னைக்குப் போனான். மூன்று நாள் காத்திருந்து உயர் அதிகாரியை சந்தித்தான். ஜெயந்தியின் அழகால் கவரப்பட்ட அதிகாரி அவர்களை உட்காரச் சொன்னார். விஷயம் கேட்டு மனம் பதறினார்.

"இந்த மனுவெல்லாம் எடுத்துட்டு மேலிடத்துக்குப் போவாத. இந்தப் பொம்பளைய பங்கு போட்டுத் தின்னுடுவாங்க. நானும் தாழ்ந்த ஜாதிதான். நரக அவஸ்தைப்பட்டுருக்கேன். பதவி உயர்வு குடுத்துட்டு இந்தப் பதவிக்கு நான் லாயக்கில்லைன்னு நம்மளையே எழுத வைப்பான். பதவிக்கு உண்டான யோக்கியதைய வளர்த்துக்கனும். இந்தப் பொண்ணு எவ்வளவு வேகமா இங்கிலீஷ் பேசுது. எம்.ஏ. படிச்சிருந்தும் உன்னால முடியலையே... ஏன்? பழகலை. பழகறதுக்கு உண்டான சூழ்நிலை இல்லை. பாவம். உன் குடும்பத்துல நீ யார்கிட்ட இங்கிலீஷ் பேசிப் பழகுவ. இவளைக் கல்யாணம் பண்ணிக்க. இவளோட பேசிப் பழகு. பாடிப் பழகு. ஆடிப் பழகு. நீ வீணை வாசிப்பதாக சொன்னியேம்மா. இந்தப் புள்ளைக்கு கத்துக் குடுப்பியா? ஹரிஜன் பையன் வீணை வாசிக்கனும். தனனா தனனா பாட்டுப் பாடனும். அட்டகாசமா இங்கிலீஷ் பேசனும். கணக்குப் போடனும். காரியம் செய்யனும். ஆத்தா... நீ ஒரு அப்ளிகேஷன் போடிமெட்டுக்கு எழுதிக் குடு. ஆறுமுகம் தலைமை ஆசிரியர். நீ உதவி தலைமையாசிரியர். எப்படின்னா அங்க பள்ளிக்கூடம் நடத்துங்க. எதுனா செய்து ஒரு நூறு மாணவர்கள் புடிச்சுடுங்க. நான் சி.எம்ம கூட்டிட்டு வரேன். சென்ட்ரல் கவர்மென்ட்டுக்கு உங்களைப் பத்தி தனி ரிப்போர்ட் அனுப்பறேன். நான் ரிடையர் ஆவறதுக்கு இன்னும் மூனு வருஷம் இருக்கு. அதுக்குள்ள செய்துர மாட்டீங்க...?"

இனம் இனத்தோடு சேர்ந்தது. கொள்கை கொள்கையோடு சேர்ந்தது. போராட கொடி உயர்த்திற்று.

அல்லிநகரத்திலிருந்து அவர்கள் கிளம்பத் தயாரானார்கள். ஜாதி வித்தியாசம் பாராத கம்யூனிஸ்ட் தோழர்கள் தலைமையில் திருமணம் முடித்தார்கள்.

'உலகத் தொழிலாளர்களே, ஒன்று சேருங்கள். இதுதான் கம்யூனிஸ்ட்டோட கோஷம். ஒரு கம்யூனிஸ்ட்டுக்கு ஜாதி கிடையாது. மொழி கிடையாது. தேசம் கிடையாது. எங்கெல்லாம் சிவப்புக் கொடி பறக்கிறதோ அதுவெல்லாம் என் தேசம். அதைத் தூக்கிப் பிடித்தவனெல்லாம் என் சகோதரன்.

போடிமெட்ல மலையாளிகள் ஜாஸ்தி. மலையாளிகள்ல கம்யூனிஸ்ட் ஜாஸ்தி. கலப்புத் திருமணம் செய்தவர்களுக்கு கம்யூனிஸ்ட்டுகளைப் போல நல்ல நண்பர்கள் வேறு எவரும் கிடையாது. "ஆறுமுகம், போடிமெட்டில பள்ளிக்கூடம் மட்டும் நடத்தாதே. ஒரு பாசறை நடத்த ஏற்பாடு செய்." தோழர்கள் விண்ணப்பம் செய்தார்கள்.

போடிமெட்டுக்கு ஆறுமுகம் குடிபெயர்ந்ததும் அவனை மலையாள கம்யூனிஸ்ட்டுகள் வரவேற்றார்கள்.

"நாயர் மோளே..." என்று ஜெயந்தியை அழைத்தார்கள். மலையாளம் கலந்த கொச்சைத் தமிழ் பேசினார்கள்.

அழகிய தமிழில் நாச்சியப்பச் செட்டியார் அறிமுகம் ஆகிப் பேசிய போது, அவர் பையில் தமிழ் நாவல் இருப்பதைப் பார்த்த போது, ஆறுமுகம் அவர் நட்புக்கு ஏங்கினான்.

ஜெயந்தியோடு அவர் எஸ்டேட்டுக்கு விருந்துக்குப் போனான். ஜெயந்தியின் அழகைப் பார்த்த பிறகுதான் நாச்சியப்பனுக்கு இன்னொரு திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. பகவதியைத் திருமணம் செய்து வந்த போது, மலையில் அவர்களுக்கு விருந்து போட்டது ஜெயந்தி. ஜெயந்தி ஆறுமுகம். ஜெயந்தியும், பகவதியும் நல்ல ஸ்நேகிதிகளாய் மாற ஆறுமுகம், நாச்சியப்பன் நட்பு பலப்பட்டது.

நண்பனின் மனைவி என்கிற விஷயத்தை இருவருமே கம்பீரமாய் காத்தார்கள். ஜெயந்தி, டீச்சரம்மா என்றுதான் நாச்சியப்பனால் அழைக்கப்பட்டாள். பகவதியை ஆறுமுகம் சின்னம்மா என்று அழைத்தான். நடுவே அபிப்பிராய பேதங்கள் வந்தபோதும் கூட இந்த நட்பின் மனைவி என்கிற கம்பீரத்தை அவர்கள் இழக்கவேயில்லை. பகவதி மதுரைக்குப் போயிருப்பதாய்த் தெரிந்ததும் நாச்சியப்பனும் மோட்டார் சைக்கிளில் ஜெயந்தியோடு மதுரைக்குக் கிளம்பினான்.

(தொடரும்)

# முதலமைச்சரின் டீச்சர்

பூ. சொல்விளங்கும் பெருமாள்



'பாட்டி பாட்டி இங்கே பாருங்களேன், முதலமைச்சர் பேசி யிருக்கிறதை'.

குடும்பமே கூடி விட்டது. தமிழ், ஆங்கில நாளிதழ் களைப் பேரன் ஓடி ஓடி வாங்கிக் குவித் தான்.

உண்மைதான். முந் தைய நாள் திண்டுக்கல் லுக்கு வந்த முதலமைச்சர் பல திட்டங்களை அறிவித் தும், திறந்து வைத்தும் பேசும் போது உற்சாகமாக மலரும் நினைவுகளில் மகிழ்ந்து பேசியிருக் கிறார்.

ஒரு பள்ளிக்கு அடிக்கல் நாட்டும் போதுதான் இப்படிப் பேசியிருக்கிறார். "என்னைப் போன்றவர்கள் எளிய குடும் பத்தில் பிறந்து, உயிரினும் மேலான உங்கள் ஆசியோடும் ஆதரவோடும் ஆட்சி நடத்துகிறோம் என்றால் அதற்கு அடிப் படைக் காரணம் ஆசிரி யர்கள் என்றுதான் கூற வேண்டும்.

"நான் கடலூரில் ஐந்தாவது படித்துக் கொண்டிருந்த போது, சுந்தரி என்ற ஒரு ஆசிரியை எங்களை அன்போடு அர வணைத்து ஆதரவோடு பாடம் சொல்லிக் கொடுத்தார். சுந்தரி அம்மாவுக்கு நாங்கள் கைகுலுக்கி மகிழ்வோம். இன்றும் அவர்கள் இருந்தால் கை குலுக்கி மகிழ்வேன். அந்தப் புனிதக் கரங்களைத் தொட்டு ஆசி பெறு வேன்.

"இங்கு ஏன் இதைக் கூறுகிறேன் என் றால், அந்த சுந்தரி ஆசிரியையின் ஊர் பக்கத்திலுள்ள வத்தலகுண்டுதான் என்று நினைவு..."

**சு**ந்தரிப் பாட்டியின் ஓய்வு பெற்ற மகன், பேரன் பேத்திகள் எல்லோரும் குதூ கலித்துக் கூத்தாடினார்கள்.

"பாட்டி முதலமைச்சரை நினைவிருக்கா பாருங்க."

பாட்டிக்குப் படமே தெரிய வில்லை. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் படித்த பத்தாயிரக்கணக்கான மாணவர்களில் ஒருவரை எப்படி நினைவிருக்கும்?

நினைவு வைத்துத்தான் தீர வேண்டும் என்பது போல் குடும் பமே வற்புறுத்தியது.

வேறு வழியில்லாமல் சுந்தரிப் பாட்டி உறவினர்கள் சொன்னதற் கெல்லாம் ஆமா ஆமா என்று கூறித் தன்னை விடுவித்துக் கொண் டார்.

**பா**ட்டியின் மகன் ஸ்ரீராம் நாளிதழ்களுக்குக் கொடுத்த செய்தியின்படி, நிருபர்கள் வந்தனர். அடுத்த நாள் நாளிதழ்களில்

பாட்டியின் படம் வெளியானது.

'பாட்டி உயிரோடு இருக்கிறார்! சுந்தரிப் பாட்டி! இன்னும் உயிரோடிருக்கிறார்.'

அம்புக்குறி போட்ட இடத்தில் பாட்டி படுப்பதாகவும், பெருக்கல் குறி போட்ட இடத்தில் சுந்தரி ஆசிரியை நடமாடுவதாகவும் படங்கள் வெளியாயின.

மறுநாள் இன்னொரு செய்தி வந்தது.

மாண்புமிகு முதலமைச்சர் தம் பழைய சுந்தரி ஆசிரியையைச் சந்திக்க விரும்புவதாகவும், ஆசிரியை உயிரோடிருப்பது மகிழ்ச்சியை அளிப்பதாகவும் கூறியிருந்தார்.

அடுத்த மாதம் ஆறாம் நாள் பழநியில் நடைபெறும் நலத் திட்ட விழாவில் ஆசிரியையைப் பாராட்டுகிறார். அவருடைய கையை முத்தமிடுவார். ஆசிரியையின் ஆசி வேண்டுகிறார்.

பழநி முருகனால் சீர்செய்ய முடியாத சாலைகளை முதல்வரின் வருகை சீர் செய்தது.

வத்தலகுண்டில் நாளிதழ், வார இதழ் நிருபர்களும் காவல் துறை அதிகாரிகளும் வளைய வளைய வந்தனர்.

பாதுகாப்பு அதிகாரிகள் சுந்தரிப் பாட்டியையும் அவரது குடும்பத்தையும் வீட்டையும் உண்டு இல்லை என்று ஆக்கிக் கொண்டிருந்தார்கள்.

ஓர் அதிகாரி, "சார், உங்கம்மா பழநிக்கு விழாவுக்கு மூன்று நாளைக்கு முன்னே வந்திடணும்" என்றார்.

"சார், எங்கம்மா எப்படி சார் பஸ்ஸில எல்லாம் வர முடியும்?"

"எங்களுக்குப் போக வர என்ன ஏற்பாடு செய்யணும்னு யாரும் சொல்லல்ல; அவங்க மூன்று நாளைக்கு முன்னால அங்க வந்திடணும், அவ்வளவுதான்."

"எங்கே?"

"விருந்தினர் மாளிகைக்கு."

"சார், முதலமைச்சர் வர்றதும் அதுவுமா, அமைச்சர்கள் அதிகாரிகள் எல்லாம் பதினைந்து நாளுக்கு முன்னாலே வந்திடுவாங்களே எப்படி சார், எங்களுக்கு விருந்தினர் மாளிகை கிடைக்கும்?"

"என்ன வளவளன்னு பேசிக்கிட்டு; எங்களுக்கு அப்படித்தான் இன்ஸ்ட்ரக்ஷன்; அதை அங்கே போய்த்தான் பாத்துக்கிடணும்." அதிகாரி போய் விட்டார்.

பேரன் பேத்திகள், தாங்களும் வருவதாக ஒரேயடியாக அடம்பிடித்தனர்.

"பாட்டி இது ஒரு நல்ல வாய்ப்பு; எம்.எஸ்சியை முடிச்சிட்டு நானும் எங்கெல்லாமோ எழுதிப் போட்டாச்சு. ஒரு வார்த்தை, ஒரே வார்த்தை சொன்னீங்க... உடனே எனக்கு வேலை கிடைச்சிடும் பாட்டி! தானாக வர்ற ஸ்ரீதேவி பாட்டி..."

"போடா அங்கே!" என்று அண்ணனை விரட்டி விட்டுத் தங்கை இடைமறித்து, "பாட்டி, மெடிக்கல் சீட், போன ஆண்டும் கிடைக்கல்ல பாட்டி, சி.எம். கண்ணை அசைச்சிட்டார்ன்னா போதும் பாட்டி" என்று கூறிக் கனவிலே வெள்ளைக் கோட் போட்டு மிதந்தாள்.

சில நிருபர்கள் வந்தார்கள். ஸ்ரீராம் வந்தவர்களை வரவேற்றுக் காப்பி பலகாரங்கள் கொடுத்தார்.

"அம்மா, உங்களுக்கு முதலமைச்சரை எவ்வளவு காலமாத் தெரியும்?"

"அவர், ஒன்றாவது வகுப்பு படித்ததிலிருந்தே தெரியும்" என்று ஸ்ரீராம் சொன்னார்.

"படிக்கிற காலத்தில அவர் எப்படி?"

"படுசுட்டி, வகுப்பில அவர்தான் ஃபஸ்ட்டாம். எப்ப பார்த்தாலும் பத்துப் பையங்களைக் கூட்டி வச்சு, 'நீ புல்லை



வெட்டு நீ தண்ணீர் எடுத்து வை'ன்னு ஒரு ராஜாங்கமே நடத்துவாராம்" - மீண்டும் ஸ்ரீராம்.

"பாட்டி ஒண்ணும் சொல்லலியே?"

"அவங்க சொல்லித்தான் நான் சொல்றேன்" என்றார் ஸ்ரீராம்.

"நடிகைகள்னா அம்மாக்கள் பதில் சொல்வாங்க; இங்கே பிள்ளை சொல்றார்" என்று முணுமுணுத்தவாறே ஒரு நிருபர் காமெராவைத் தொட்டார். குடும்பமே பாட்டியை மறைத்து இளித்துக் கொண்டு நின்றது.

அதிகாரி ஒருவர் வந்தார். சுந்தரி அம்மாவுக்கு வணக்கம் செலுத்தி விவரத்தைக் கூறினார்.

ஞாயிற்றுக் கிழமை நிகழ்ச்சி. பழநிக்குச் சென்று கோட்ட அதிகாரியை வெள்ளிக் கிழமை பார்க்க வேண்டும். சனிக்கிழமையன்று பள்ளி மைதானத்தில் பாட்டியோடு துணைக்கு ஒருவர் போகலாம். வேறு யாரும் போனால் தங்குவதற்கும் சாப்பாட்டிற்கும் அவர்களே ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும்.

மூச்சுவிடாமல், மூன்றாவது வகுப்புப் பிள்ளை பாடங்களை ஒப்புவித்துச் செல்வது போல் முறையாகச் சொல்லிச் சென்றார்.

வீட்டுப் பேரவை கூடி, பாட்டியுடன் ஸ்ரீராமும் அவர்தம் இல்லத்தரசியும் பேரனும் செல்வதாக ஏகமனதாகத் தீர்மானித்தனர்.

பேத்தி வெளிநடப்பு செய்தாள்; புத்தகங்களைத் தூக்கி எறிந்தாள். அண்ணனை ஆளை வைத்தாவது உதைப்பேன் என்றாள். சாப்பிட மாட்டேன் என்று கீழே விழுந்து புரண்டாள்.

வெள்ளிக் கிழமை மிக மிகப் பெரும் சிரமங்களுக்கிடையே பாட்டியைக் கூட்டிக் கொண்டு பழநி வந்தனர். சனிக்கிழமை ஓர் ஆட்டோவில் ஏறிப் பாட்டி, ஸ்ரீராம், பேரன் மூவரும் காலை ஒன்பது மணிக்குப் பள்ளி மைதானத்திற்குள் நுழைந்தனர்.

மைதானத்தின் எதிரில் இருந்த பள்ளிக் கூடத்தில் ஓரறைக்கு பாட்டியைக் கைத்தாங்கலாகவும் கால்தாங்கலாகவும் தூக்கிச் சென்றனர்.

சரியாகப் பத்து மணிக்குப் பாதுகாப்புச் சோதனை நடந்தது.

சிறுபிள்ளைகள், விவசாயிகள், வீரசாகசம் புரிந்தோர் என நூற்றுக்கணக்கில் இந்த வெள்ளோட்ட நிகழ்ச்சிக்கு வந்திருந்தனர்.

செய்தித்தாளில் பார்த்ததைக் கொண்டு சிலர் பாட்டியைச் சூழ்ந்தனர். என்ன இருந்தாலும் முதலமைச்சரின் ஆசிரியை அல்லவா?

சிறு ஒலிபெருக்கி சொன்னது 'பாராட்டும் பரிசும் பெறுபவர்களின் பெயர் படிக்கப் பெறும்; அந்த வரிசையில் வர வேண்டும்; இலேசாக இசை ஒலிக்கப் பெறும்; இடப்பக்கம் மேடையிலேறி வலப் பக்கம் இறங்க வேண்டும்; உங்கள் பட்டாவோ, பத்திரமோ பரிசோ மாறி விட்டாலும் மேடையில் ஒன்றும் பேசக் கூடாது; முதலமைச்சருடன் நீங்களாக எதுவும் பேசக் கூடாது; உணர்ச்சிவயப்பட்டு எதுவும் செய்து விடக் கூடாது.'

ஸ்ரீராம் எல்லாவற்றையும் சுந்தரிப் பாட்டியிடம் சொன்னார்.

மேடையில் ஒரு போலி முதலமைச்சர் நின்றார்; சுற்றிப் போலிக் காவலர்கள். ஒலிபெருக்கியில் வரிசையாக உண்மையான பெயர்களை வாசிக்க, உண்மையான ஆட்கள் மேடைக்குச் சென்று, போலிப் பட்டாக்களையும் பட்டயங்களையும் போலி முதலமைச்சரிடமிருந்து, காவல்துறை சொன்ன கோணத்தில் கும்பிட்டு வாங்கிக் கொண்டு போலி போட்டோவுக்குப் போஸ் கொடுத்து வலப்புற வழியாக இறங்கினர்.

"சுந்தரி ஆசிரியை, முதலமைச்சரின் ஆசிரியை" என ஒலிபெருக்கி அழைத்தது.

ஸ்ரீராம் அம்மாவுடன் போக முயன்றார். 'பாதுகாப்பு' கருதி அவரை அனுமதிக்க வில்லை.

"அவங்க படி ஏற சிரமப்படுவாங்களே!"

"பாதுகாப்பு அதிகாரிங்க, மெதுவா உதவுவாங்க." - இரண்டு அதிகாரிகள் வந்து சுந்தரி ஆசிரியையைத்





''என்ன தலைவரே... நம்ம கட்சித் தொண்டர்களை வேற கட்சி மீட்டிங்குகளுக்கு வாடகைக்கு விடுறீங்களாமே?''

''என்ன செய்யறது... கட்சியோட நிதி நிலமை சரியாகற வரை இப்படித்தான் சம்பாதிக்க வேண்டியிருக்கு!''

– அம்பை தேவா

---

தூக்கிக் கொண்டு சென்றனர்.

"அம்மா, வலிக்குதுடா!"

"இந்தா அடா புடான்னே அப்படியே விட்டிடுவோம், கிழவி!"

போலி முதலமைச்சர், "அம்மா, நல்லா இருக்கீங்களா?" என்று கட்டித் தழுவினார்.

பக்கத்திலிருந்த அதிகாரி, "கட்டித் தழுவாதய்யா, பெரிய எம்.ஜி.ஆரு. கையை மட்டும் பிடி, பிடிச்சு முத்தம் கொடு" என்றார். போலி முதல்வர் 'சரி' என்றார்.

சுந்தரிப் பாட்டி, அவரது கையைப் பிடித்து முத்தம் இட்டார்.

"பாட்டி, சி.எம். கையைப் பிடிக்காதீங்க; சும்மா நில்லுங்க."

"ஐயா, எம் பேரனுக்கு ஒரு வேலை, பேத்திக்கு ஒரு சீட்..." - மெதுவாகத்தான் கெஞ்சினார்.

"பாட்டி இந்த விவகாரமே வச்சுக்கிடப் படாது. முதல்வர் பேசலாம்; நீங்க பேசக் கூடாது" என்று கண்டிப்பாகக் கூறினார் ஓர் அதிகாரி.

மேடையில் இந்த ஒத்திகை மூன்று தடவை நடந்தது.

இனி, அவர்கள் பேசச் சொன்னாலும் பாட்டியால் பேச முடியாது; அத்தனை சோர்வு ஆகி விட்டது.

ஒலிபெருக்கி மீண்டும் ஒலித்தது.

"எல்லாருக்கும் சாப்பாடு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது; வெளியே போகக் கூடாது; மாலையில் ஐந்து மணிக்கு மீண்டும் ஒரு ஒத்திகை உண்டு."

பாட்டி வகுப்பறைத் தரையில் படுத்து ஓய்வெடுத்தார்.

மீண்டும் ஐந்து மணி ஒத்திகையில் நான்கைந்து தடவை படாதபாடு படுத்தி விட்டனர். உண்மையான முதலமைச்சர் ஆசிரியையிடம் எப்படி நடந்து கொள்வார் என்று போலிக்குக் கற்பனை செய்து கொள்ள முடியவில்லை.

முதலமைச்சர் ஆசிரியையை முத்தமிட்டால் சுந்தரிப் பாட்டி திருப்பி முத்தமிடலாமா? பெரிய பட்டிமன்றமே நடந்தது.

போலி முதலமைச்சர் நான்கு தடவை விதியே என்று ஆசிரியையை முத்தமிட இவர்கள் பதிலுக்குக் கையில் மட்டும் நான்கு தடவை முத்தமிட, சுந்தரி சோர்ந்து விட்டார்.

எல்லோரையும் மறுநாள் பிற்பகல் வரச் சொன்னார்கள். காவல் துறை வண்டியில் மரியாதையுடன் தங்குமிடத்தில் வந்து சேர்ந்தனர்.

மறுநாள் இரண்டு மணிக்கு மீண்டும் பள்ளி மைதானம். மூன்று மணி நேரக் காத்திருப்பு; சுந்தரிப் பாட்டி நீட்டி நிமிர்ந்து படுத்து விட்டார்.

காவல்துறை படு பரபரப்பில் இருந்தது. பட்டா, பட்டயம், பாராட்டுப் பெறுவோர் அவரவர் இடத்தில் அமரும் நேரம்.

பாட்டியை ஸ்ரீராமும் ஒரு காவலரும் மெதுவாக நடத்தியும் தூக்கியும் இழுத்தும் சென்று உரிய இருக்கையில் அமரச் செய்தனர்.

ஸ்ரீராம் பக்கத்தில் உட்கார அனுமதி இல்லை.

ஆயிரக்கணக்கான மக்கள் ஆரவாரத்துக்கிடையில் முதலமைச்சர் வந்தார்.

நிகழ்ச்சிகள் விறுவிறுப்படைந்தன. வட்டம், சதுரம், குட்டம் எல்லாம் பேசி முடித்த புனித நேரம்...

ஏற்கெனவே ஒத்திகையில் சொல்லி வைத்தவாறு இயந்திர கதியில் நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது.

"ஆசிரியை சுந்தரி - முதலமைச்சரின் ஆசிரியை!" ஒலிபெருக்கி அலறியது.

யாரும் வரவில்லை.

சுந்தரிப் பாட்டி, அவர் இருந்த இருக்கையில் அமைதியாகக் கிடந்தார். பட்டம் பதவி பெறாமல் சிவலோகப் பதவியை அடைந்திருந்தார்.

---



''என்னது பரீட்சை ஹால்ல இட ஒதுக்கீடு பிரச்னையா?''

''நல்லாப் படிக்கிறவங்க பக்கத்துல இடம் ஒதுக்கச் சொல்லி சில மாணவர்கள் ஆர்ப்பாட்டம் பண்றாங்க!''

–ஞா. ஞானமுத்து


கிரிக்கெட்!
மதி...
இனிமே பாகிஸ்தான் ஸ்டைல் ஆட்டம்தான் சரிப்பட்டு வரும்...
இதப்பாரு... சும்மா ஒரு ரன், ரெண்டு ரன்னு ஓடி வந்து தொந்தரவு பண்ணாதே! ஒன்லி சிக்ஸர் & ஃபோர்தான்!
கடவுளே காப்பாத்து...


நான் சந்தேகப்பட்டது சரியாப்போச்சு! இவர் டிராபிக் கான்ஸ்டபிளேதான்! பாருங்க, கோட்டைத் தாண்டி நோபால் போட்டதுக்கு ஸ்பாட்ஃபைன் தர்றியா அல்லது ஐம்பது ரூபா வெட்டுறியான்னு கேக்கறாரு!
பெவிலியன் காலரில ஆருத்தி ஜெயந்தா கூட ஸாரி கட்டியிருக்கா பார்! ப்ரமாதம் இல்லை!
ஹெல்மெட், கிளவுஸ், அப்டமன் கார்டு, பேட் எல்லாம் மாட்டிட்டேன் ஆனாலும் எதையோ மறந்துட்ட மாதிரி தோணுது....
அட... நைட் வாட்ச்மேன் வர்றார் பாருப்பா!
ஒரு ரன்தான் இருக்குது, எப்படியாவது அடிச்சுடுப்பா! நீதான் லாஸ்ட் பேட்ஸ்மேன், மறந்துடாதே...!
பெவிலியன்

## 14. காளியின் தாகம்

பேச்சுக்குரல் நெருங்கி வருவதாகத் தோன்றவே, பொன்னன் விக்கிரமனை மண்டபத்துக்குள் ஒதுக்குப்புறமாக இருக்கச் சொல்லி விட்டு எட்டிப் பார்த்தான். மண்டபத்தை நோக்கி இரண்டு பேர் வருவது தெரிந்தது. ஆனால் இருட்டில் முகம் ஒன்றும் தெரியவில்லை. அப்போது பளீரென்று ஒரு மின்னல் மின்னிற்று. மின்னலில் அந்த இருவருடைய முகத்தையும் பார்த்ததும், பொன்னனுடைய உடம்பெல்லாம் ஒரு தடவை பதறிற்று. வந்தவர்களில் ஒருவன் மாரப்பபூபதி; இன்னொருவன்.... ஆம், கபால ருத்ர பைரவன்தான்!

அவர்களை அவ்விதம் திடீரென்று பார்த்த பேரதிர்ச்சியை ஒருவாறு பொன்னன் சமாளித்துக் கொண்டு விக்கிரமன் இருந்த இடத்தின் அருகில் சென்று, அவரைத் தொட்டு மெல்லிய குரலில், "மகாராஜா...!" என்றான்.

விக்கிரமன், "இதென்ன, பொன்னா? ஏன் இப்படி நடுங்குகிறாய்?" என்பதற்குள், பொன்னன் விக்கிரமனுடைய வாயைப் பொத்தி, "இரைய வேண்டாம்! பெரிய அபாயம் வந்திருக்கிறது; எதற்கும் சித்தமாயிருங்கள்!" என்று காதோடு சொன்னான்.

விக்கிரமன் இடுப்பைத் தடவிப் பார்த்து, "ஐயோ! வாள் ஆற்றோடு போய் விட்டதே!" என்று முணுமுணுத்தான்.

வந்தவர்கள் இருவரும் அந்த மண்டபத்தின் வாசல் திண்ணையில் வந்து மழைக்கு ஒதுங்கி நின்றார்கள். அவர்களுடைய பேச்சு உள்ளே இருந்தவர்களின் காதில் சில சமயம் தெளிவாகவும் சில சமயம் அரைகுறையாகவும் விழுந்தது.

அவர்களில் ஒருவனுடைய குரலைச் சட்டென்று விக்கிரமனும் தெரிந்து கொண்டான். திடுக்கிட்டு அவன் எழுந்திருக்கப் போன போது, பொன்னன் அவனைப் பிடித்து உட்கார வைக்க வேண்டியிருந்தது.

"மகாப் பிரபோ! காளிமாதா எனக்கு இன்னும் என்ன ஆக்ஞாபித்திருக்கிறாள்? கிருபை கூர்ந்து சொல்ல வேண்டும்" என்றது மாரப்பனின் குரல்.

இதற்குப் பதில் கூறிய குரலானது கேட்கும்போதே மயிர்க்கூச்சல் உண்டாக்கக் கூடியதாயிருந்தது. ஒருவேளை பேய், பிசாசுகள் பேசுமானால் இப்படித்தான் அவற்றின் குரல் இருக்கும் என்று எண்ணும்படியிருந்தது.

"மாதா உனக்கு இன்னும் பெரிய பெரிய பதவிகளையெல்லாம் கொடுக்கக் காத்திருக்கிறாள். உன்னிடம் இன்னும் பெரிய பெரிய காரியங்களையும் எதிர்பார்க்கிறாள். அன்னைக்கு ரொம்பவும் தாகமாயிருக்கிறதாம். ராஜ வம்சத்தின் இரத்தம் வேண்டுமென்கிறாள்!..."

"ஆயிரம் வருஷத்துப் பரம்பரை ராஜ வம்சத்தில் பிறந்த அரசிளங் குமாரனைக் காளிக்கு அர்ப்பணம் செய்ய முயன்றேன். எப்படியோ காரியம் கெட்டுப் போய் விட்டதே..."

"உன்னாலேதான் கெட்டது. அந்த ராஜ குமாரனுக்காக நானே வந்திருந்தேன். நீ குறுக்கிட்டுக் கெடுத்து விட்டாய்."

"மன்னிக்க வேண்டும். பிரபோ... ஆனால் ராஜ குமாரன் வருகிறான் என்று உங்களுக்கு எப்படித் தெரிந்தது?"

"மறுபடியும் அதே கேள்வியைக் கேட்கிறாயே? காளிமாதா சொல்லித்தான் தெரிந்தது. அருள்மொழி ராணியின் வாய்மொழியாக மாதா எனக்குத் தெரிவித்தாள். 'அதோ கப்பலில் வந்து கொண்டிருக்கிறான்! கரையை நெருங்கிக் கொண்டிருக்கிறான்!' என்று ராணி சொன்னாள். நான் வந்தேன்! அதற்குள்ளாக நீ நடுவில் குறுக்கிட்டுக் காரியத்தைக் கெடுத்து விட்டாய்."

"பிரபோ! க்ஷமிக்க வேண்டும்..."

"போனது போகட்டும். மாதா உன்னை க்ஷமித்து விட்டாள். ஆனால், 'தாகம்' 'தாகம்' என்று கதறிக் கொண்டிருக்கிறாள்! ராஜகுல ரத்தம் வேண்டும் என்கிறாள்! இந்த அமாவாசை போய் விட்டது. துலா மாதப் பிறப்பிலாவது தாயின் தாகத்தைத் தணிக்க வேண்டும்... அவனை நீ எப்படியாவது தேடிப் பிடித்துக் கொண்டு வர வேண்டும்...."

"கொண்டு வந்தால்..."

"கொண்டு வந்தால் உன் மனோரதம் நிறைவேறும். பூபதி! காளி மாதாவைச் சரண

# கனவு

மாக அடைந்தவுடனே உனக்குச் சேனா பதிப் பதவி கிடைக்கவில்லையா? இன்னும்..."

"இன்னும் என்ன, சுவாமி?"

"இன்னும் மிகப் பெரிய பதவிகள் உனக்கு நிச்சயம் கிடைக்கும்."

"பெரிய பதவிகள் என்றால்..."

"சோழ நாட்டின் சிம்மாசனம் உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. மாதா கையில் கிரீடத்தை வைத்துக் கொண்டு உன் தலையில் சூட்டக் காத்திருக்கிறாள்."

"அவ்வளவுதானா, பிரபோ!"

"அதைவிடப் பெரிய பதவியும் அன்னை வைத்துக் கொண்டிருக்கிறாள்."

"அது என்னவோ?"

"என்னவா? பல்லவ சாம்ராஜ்யத்தின் சிம்மாசனம்தான்!"

"ஆ!" என்றான் மாரப்ப பூபதி. சற்று நேரம் மௌனம் குடிகொண்டிருந்தது.

"ஆனால், அப்படிப்பட்ட மகத்தான பதவி லேசில் கிடைத்து விடாது. அதற்குத் தகுந்த காணிக்கை காளிமாதாவுக்கு நீ சமர்ப்பிக்க வேண்டும்."

"அடியேனிடம் மாதா என்ன எதிர் பார்க்கிறாள்?"

"முதலில் பார்த்திபன் மகனைத் தேடிப் பிடித்துக் கொண்டு வர வேண்டும்."

"செய்கிறேன்; அப்புறம்?"

"வரும் துலா மாதப் பிறப்பன்று..."

"சொல்லுங்கள், பிரபோ!"

"காளி மாதா சந்நிதிக்கு நீ வர வேண்டும்..."

"வந்து..."

"உன்னுடைய தலையை உன்னுடைய கையினாலேயே வெட்டி மாதாவுக்கு அனிக்க வேண்டும்!"

"ஐயோ!" என்று மாரப்பன் அலறினான்.

"அளித்தால் அடுத்த ஜென்மத்தில் காஞ்சி சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாகலாம், இல்லாவிட்டால்..."

"இல்லாவிட்டால், என்ன பிரபோ!"

"ஆத்ம பலிக்கு ஈடான இன்னொரு மகா பலி அளிக்க வேண்டும். அளித்தால் இந்த ஜென்மத்திலேயே சக்கரவர்த்தி பதவி கிட்டும்."

"அது என்ன பலி, சுவாமி!"

"அந்த விபூதி ருத்திராட்சதாரியைப் பலிக்குக் கொண்டு வர வேண்டும்..."

"பிரபோ! இராஜ வம்சத்து இரத்தத்தை விரும்பும் காளி மாதா கேவலம் ஒரு விபூதி ருத்திராட்சதாரியைப் பலி கொள்ள விரும்புவானேன்?" என்று மாரப்பன் கேட்டான்.

"பூபதி! உனக்குத் தெரிந்தது அவ்வளவுதான்; அந்தப் போலி ருத்திராட்சதாரி - உண்மையில் யார் தெரியுமா உனக்கு?"

"யார் பிரபோ!" என்று பூபதி வியப்புடன் கேட்டான்.

"பூபதி! அது மகா மர்மம் - யாரும் அறிய முடியாத இரகசியம் - இதோ அடிக்கும் இந்தக் காற்றின் காதிலே கூட விழக் கூடாது. அருகில் வா! காதோடு சொல்கிறேன்..."

சொல்ல முடியாத வியப்புடனும் பயத்துடனும் மேற்படி சம்பாஷணையின் பெரும் பகுதியைக் கேட்டுக் கொண்டு வந்த விக்கிரமனும் பொன்னனும் இப்போது செவிகளை மிகக் கூர்மையாக வைத்துக் கொண்டு கேட்டார்கள். ஆனால் ஒன்றும் காதில் விழவில்லை.

திடீரென மாரப்பன் இடி இடி என்று சிரிக்கும் சப்தம் கேட்டது.

"பூபதி! ஏன் சிரிக்கிறாய்? மாதாவின் வார்த்தையில் உனக்கு அவநம்பிக்கையா?" என்று கபால பைரவர் கோபக் குரலில் கேட்டார்.

"இல்லை பிரபோ! இல்லை!" என்றான் மாரப்பன்.

"பின்னர், ஏன் சிரித்தாய்?"

"அந்தச் சிவனடியாரைக் கைப்பற்றிக் கொண்டு வரும்படி இன்னொரு தேவியிடமிருந்தும் எனக்குக் கட்டளை பிறந்திருக்கிறது. அந்தத் தேவி யார், தெரியுமா?"

"யார்?"

"தர்ம ராஜாதி ராஜ மாமல்ல நரசிம்ம பல்லவ சக்கரவர்த்தியின் திருக்குமாரி குந்தவி தேவிதான்!"

"ரொம்ப நல்லது. காளி மாதா தன் விருப்

அமரர் கல்கி

பத்தைப் பலவிதத்திலும் நிறைவேற்றிக் கொள்கிறான்!'' என்றார் மகா கபால பைரவர்.

இந்தச் சமயத்தில் சற்று தூரத்தில் குதிரைகளின் குளம்படிச் சப்தமும், இரைச்சலும் ஆரவாரமும் கேட்டன. பொன்னன் சப்தமிடாமல் நடந்து வாசற்படியருகில் வந்து எட்டிப் பார்த்தான். ஐந்தாறு குதிரை வீரர்கள் தீவர்த்தி வெளிச்சத்துடன் வந்து கொண்டிருப்பது தெரிந்தது. பொன்னன் மனதிற்குள், "இன்று மகாராஜாவும் நாமும் நன்றாய் அகப்பட்டுக் கொண்டோம்!'' என்று எண்ணினான். அவனுடைய மார்பும் 'பட்பட்' என்று அடித்துக் கொண்டது. சட்டென்று தலையை உள்ளே இழுத்துக் கொண்டான்.

அதே சமயத்தில் மாரப்ப பூபதி, "மகாப்ரபோ! அதோ என்னுடைய ஆட்கள் என்னைத் தேடிக் கொண்டு வருகிறார்கள்; நான் போக வேண்டும்" என்றான்.

"நானும் இதோ மறைந்து விடுகிறேன். மாதாவின் கட்டளை ஞாபகம் இருக்கட்டும்..."

"மறுபடியும் எங்கே சந்திப்பது?"

"வழக்கமான இடத்தில்தான். சித்ரகுப்தன் உனக்காகக் காத்திருப்பான்."

இதற்குள் இரைச்சலும் ஆரவாரமும் அருகில் நெருங்கி விட்டன.

"நான் சொன்னதெல்லாம் ஞாபகம் இருக்கட்டும்."

"அப்படியே பிரபோ!"

இதற்குப் பிறகு சற்று நேரம் பேச்சுக் குரல் ஒன்றும் கேட்கவில்லை. திடீரென்று கொஞ்ச தூரத்தில், "சோழ சேனாபதி மாரப்பபூபதி வாழ்க! வாழ்க!'' என்ற கோஷம் கேட்டது. பொன்னனும் விக்கிரமனும் மண்டபத்துக்கு வெளியில் வந்து பார்த்த போது, தீவர்த்திகளின் வெளிச்சத்தில் குதிரைகள் உறையூர்ச் சாலையில் விரைவாகப் போய்க் கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

"மகாராஜா, எப்பேர்ப்பட்ட இக்கட்டிலிருந்து தப்பினோம்?'' என்று சொல்லிப் பொன்னன் பெருமூச்சு விட்டான்.

விக்கிரமன் ''பொன்னா! என்ன துரதிர்ஷ்டம்? நான் ஏறி வந்த குதிரை, அதன் மேலிருந்த இரத்தினப் பைகள் எல்லாம் ஆற்றோடு போய் விட்டதினால் கூட மோசம் இல்லை; என் உடைவாளும் போய் விட்டதே! என்ன செய்வேன்?'' என்றான்.

"மகாராஜா!"

"என்ன, பொன்னா?"

"ஒரு விஷயம் ஞாபகம் வருகிறது. மகாராணி ஸ்தல யாத்திரை கிளம்பும் போது என்னிடம் ஒரு பெட்டியை ஒப்புவித்தார்கள். உங்களிடம் கொடுக்கும்படி....."

"என்ன பெட்டி அது? சீக்கிரம் சொல்லு பொன்னா!"

''அதில் உங்கள் குலத்தின் வீர வாள் இருக்கிறது. பிடியில் இரத்தினங்கள் இழைத்



தது...''

"நிஜமாகவா, பொன்னா? ஆகா! முக்கிய மாக அந்த வாளுக்காகத்தானே நான் இப் போது தாய்நாட்டுக்கு வந்தேன்! என் தந்தை போருக்குக் கிளம்பும் போது, அந்தப் பெட்டியைத் திறந்து, அதிலிருந்த பட்டாக் கத்தியையும் திருக்குறள் சுவடியையும் எனக்குக் காட்டி, 'இவைதாம் நான் உனக்கு அளிக்கும் குலதனம்!' என்றார். எங்கள் மூதாதை - பரதகண்டத்தையெல்லாம் ஒரு குடையின் கீழ் ஆண்டு, கடல்கடந்த தேசங் களிலும் ஆட்சி செலுத்திய கரிகாலச் சோழர் - கையாண்ட வாள் அது, பொன்னா! பத்திரமாய் வைத்திருக்கிறாயல்லவா?''

"வைத்திருக்கிறேன், சுவாமி!''

"எங்கே?''

"வசந்தத் தீவில் புதைத்து வைத்திருக்கிறேன்.''

"அங்கே ஏன் வைத்தாய்?''

"வேறு எங்கே வைப்பேன், மகாராஜா!''

"சரி பொன்னா! நாம் இப்போது வசந்த தீவுக்குப் போய் அந்த வாளை எடுத்துக் கொள்ள வேண்டியதுதான். என் தந்தை என்ன சொன்னார், தெரியுமா? ஒன்பது வருஷத்துக்கு முன்னால் சொன்னது நேற்றுத்தான் சொன்னது போலிருக்கிறது. 'விக்கிரமா! இந்தக் கரிகாலச் சோழரின் வீர வாளை வேறொரு அரசனுக்குக் கப்பம் செலுத்தும் கையாலே தொடக் கூடாது. ஆகையினால்தான் என் வாழ்நாளில் நான் இதை எடுக்கவேயில்லை. நீ எப்போது ஒரு கையகலமுள்ள பூமிக்காவது சுதந்திர மன்ன னாகிறாயோ, அப்பொழுது இந்த வாளை எடுத்துக் கொள்' என்றார். பொன்னா! நான் இப்போது செண்பகத் தீவின் சுதந்திர அரசன் அல்லவா? இனி அந்த வாளை நான் தரிக்கலாம்..''



"மகாராஜா! செண்பகத் தீவுக்கு மட்டுந்தானா? சோழ நாட்டுக்கும் நீங்கள்தான் அரசர்..."

"அதற்கு இன்னும் காலம் வரவில்லை, பொன்னா! ஆனால் சீக்கிரத்தில் வந்துவிடும். நாம் உடனே செய்ய வேண்டிய காரியங்கள் இரண்டு இருக்கின்றன. அந்த வீர வாளையும் திருக்குறளையும் எடுத்துக் கொள்ள வேண்டும். இந்தப் பயங்கர நரபலி கூட்டத்திலிருந்து மகாராணியை விடுவித்து அழைத்துப் போக வேண்டும். இவற்றுள் முதலில் எதைச் செய்வது, அப்புறம் எதைச் செய்வது என்பதை இப்போது தீர்மானிக்க வேண்டும்."

அவர்கள் மேலும் யோசனை செய்து, முதலில் உறையூருக்குப் போய் வசந்தத் தீவிலிருந்து வீர வாளை எடுத்துக் கொள்வதென்றும், பிறகு திரும்பி வந்து சிவனடியாரைத் தேடிப் பிடித்து அவருடைய உதவியுடன் மகாராணியைக் கண்டுபிடிப்பதென்றும் தீர்மானித்தார்கள். இருவரும் மிகவும் களைத்திருந்தபடியால் அன்றிரவு இந்த மண்டபத்திலேயே உறங்கி விட்டு, அதிகாலையில் எழுந்து உறையூருக்குப் போவதென்றும் முடிவு செய்தார்கள். ஆனால் விக்கிரமனுக்கு ஏற்கெனவே கடுமையான சுரம் அடித்துக் கொண்டிருந்ததென்பதையாவது, பொழுது விடிவதற்குள் அவன் ஒரு அடி கூட எடுத்து வைக்க முடியாத நிலைமையை அடைவானென்பதையாவது அவர்கள் அறிந்திருக்கவில்லை.

## 15. திரும்பிய குதிரை

குந்தவி குழந்தைப் பருவத்திலிருந்தே தந்தையின் பெண்ணாக வளர்ந்து வந்தவள் என்று முன்னமே குறிப்பிட்டிருக்கிறோம். நரசிம்ம சக்கரவர்த்தியே அவளுக்குத் தாயும் தகப்பனும் ஆசாரியனும் உற்ற சிநேகிதனுமாயிருந்தவர். அவளுக்கு ஏதாவது மனக்கிலேசம் ஏற்பட்டால் அப்பாவிடம் சொல்லித்தான் ஆறுதல் பெறுவாள்; சந்தேகம் வந்தால் அவரைத்தான் கேட்பாள்; ஏதாவது குதூகலிக்கக்கூடிய விஷயம் நேர்ந்தாலும் அவரிடம் சொல்லிப் பகிர்ந்து கொண்டால்தான் அவளுக்குப் பூரண திருப்தி உண்டாகும். ஒரு கதையோ, கவிதையோ, நன்றாயிருந்தால் அவரிடம் சொல்லி அனுபவிக்க வேண்டும்; ஒரு சித்திரமோ சிற்பமோ அழகாயிருந்தால் அவருடன் பார்த்து மகிழ வேண்டும். இப்படியெல்லாம் வெகு காலம் வரையில் மகளும் தந்தையும் இரண்டு உடம்பும் ஒரே உள்ளமுமாக ஒத்திருந்தார்கள்.

ஆனால், அந்தக் காலம் போய் மூன்று வருஷம் ஆகிவிட்டது. அப்பாவுக்கும் பெண்ணுக்குமிடையே இப்போதெல்லாம் ஒரு மானசீகத் திரை போட்டது போலிருந்தது. தேசப் பிரஷ்ட தண்டனைக்குள்ளான சோழ ராஜகுமாரனுடைய ஞாபகம் குந்தவியின் மனத்தை விட்டு அகலவில்லை. எவ்வளவோ முயன்று பார்த்தும் அவனை மறக்க முடியவில்லை. அந்த ராஜகுமாரனைப் பற்றிக் குந்தவி பேச விரும்பினாள். ஆனால் யாரிடம் பேசுவது? இத்தனை நாளும் தன்னுடைய அந்தரங்க எண்ணங்கள், ஆசைகள் எல்லாவற்றையும் தந்தையிடமே சொல்லி வந்தாள். ஆனால் சோழ ராஜகுமாரன் விஷயமாக அவரிடம் மனம் விட்டுப் பேச முடியவில்லை. எப்போதாவது ஏதாவது கேட்டாலும் தன் எண்ணத்தைச் சிறிதும் அறிந்து கொள்ளாதது போலவே அவர் மறுமொழி சொல்லி வந்தார். தனக்குத் தாயார் இல்லையே என்ற குறையைக் குந்தவி இப்போதுதான் உணர ஆரம்பித்தாள்.

அந்தக் குறையை ஒருவாறு நீக்கிக் கொள்வதற்காக அவள் விக்கிரமனுடைய அன்னையுடன் சிநேகம் கொள்ள விரும்பினாள். ஆனால், அருள்மொழியைக் குந்தவி சந்தித்த அன்றே அவள் பரஞ்சோதியடிகளுடன் தீர்த்த யாத்திரை கிளம்பி விட்டதைப் பார்த்தோம். யாத்திரையின் போது ஒரு சமயம் அவர்கள் மாமல்லபுரத்துக்கும் வந்திருந்தார்கள். சில தினங்கள் அந்த கலா க்ஷேத்திரத்தில் தங்கினார்கள். குந்தவியும்

### அருள்வாக்கு

குருவின் அநுக்ரஹத்தால்தான் ஞானம் கிடைக்கும் என்ற விஷயம் சாந்தோக்ய உபநிஷத்திலேயே சொல்லியிருக்கிறது. ஆசார்யவான் புருஷோ வேத - ஆசாரியனைப் பெற்ற புருஷன்தான் ஞானத்தை அடைகிறான் - என்று அதில் இருக்கிறது. ஒரு சின்னக் கதை போல இதைச் சொல்லியிருக்கிறது. காந்தார தேசத்தை (இந்த நாள் காண்டஹார் என்பது அதுதான்) சேர்ந்த ஒருத்தனின் கண்ணைக் கட்டிக் கொண்டு போய் ஜனசஞ்சாரமில்லாத ஒரு இடத்தில் விட்டு விட்டால் எப்படியிருக்கும்? அவன் எப்



படித் தன் ஊருக்குத் திரும்புவான்? கிழக்கா, மேற்கா, தெற்கா, வடக்கா என்று தெரியாமல் தானே தவித்துக் கொண்டிருப்பான்? இந்த மாதிரிதான் மாயை நம் கண்ணைக் கட்டி இந்த லோகத்தில் விட்டிருக்கிறது. அப்புறம், கண்ணைக் கட்டிக் காட்டில் விடப்பட்டவனிடம் ஒருவன் வருகிறான். கட்டை அவிழ்த்து விடுகிறான். காந்தார தேசத்துக்குப் போகிற வழியையும் சொல்லிக் கொடுக்கிறான். அதற்கப்புறம் இவன் அழவில்லை, பயப்படவில்லை. அவன் சொன்ன மாதிரியே போய்த் தன் ஊரை அடைகிறான். இந்த மாதிரிதான் ஆசாரியனின் உபதேசத்தால், நாம் எங்கேயிருந்து வந்தோமா அந்தப் பரமாத்ம ஸ்தானத்துக்கு வழியைத் தெரிந்து கொண்டு அங்கே போய்ச் சேருகிறோம் என்று சாந்தோக்யம் சொல்கிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

அப்போது மாமல்லபுரத்தில் இருந்தாள். அடிக்கடி அருள்மொழி ராணியைப் பார்த்தாள். ராணி அவளிடம் மிகவும் பிரியமாகவே இருந்தாள். ஆனாலும் அவர்களுடைய உள்ளங்கள் கலக்கவில்லை. எப்படிக் கலக்க முடியும்? தன்னுடைய ஏக புதல்வனைக் குந்தவியின் தந்தை கண்காணாத தீவுக்கு அனுப்பி விட்டதைப் பற்றி அருள்மொழியின் மனம் கொதித்துக் கொண்டிருந்தது. குந்தவிக்கோ தன் தந்தை மேல் அணுவளவேனும் குற்றம் இருப்பதாகத் தோன்றவில்லை. தந்தையினிடத்தில் அவளுக்கு இருந்த ஒப்பில்லாத பிரியத்தோடு அவரைப் பற்றி அவளுக்கு ரொம்பப் பெருமையும் உண்டு. இதிகாசங்களில் வரும் சூரிய, சந்திர வம்சத்துச் சக்கரவர்த்திகளைப் போல் பெருமை வாய்ந்தவர் தன் தந்தை; வடக்கே நர்மதை நதி வரையில் சென்று திக் விஜயம் செய்தவர்; ராட்சஸப் புலிகேசியை வென்று வாதாபியை அழித்தவர்; அப்படிப்பட்டவரின் கீழ் சிற்றரசனாயிருப்பதே அந்தச் சோழ ராஜகுமாரனுக்குப் பெருமையல்லவா? இருநூறு வருஷமாகச் சோழர்கள் பல்லவ சக்கரவர்த்திகளுக்கு அடங்கிக் கப்பம் செலுத்தி வரவில்லையா? இப்போது மட்டும் என்ன வந்தது?

இவ்விதம் அந்த இரண்டு பேருடைய மனோபாவங்களிலும் வித்தியாசம் இருந்தபடியால் அவர்கள் மனங்கலந்து பேச முடியவில்லை. ஒருவரிடம் ஒருவரின் அன்பு வளர்ந்தது. ஆனால் ஒவ்வொருவருடைய இதயத்திலும் ஒரு முக்கியமான பகுதி பூட்டப்பட்டுக் கிடந்தது.

ஒருநாள் அருள்மொழி ராணி ஓரளவு தன் இருதயத்தின் கதவைத் திறந்தாள். குந்தவியின் தந்தைக்கு தன்னை மணஞ் செய்து கொடுப்பதாகப் பேச்சு நடந்ததையும், தான் அதைத் தடுத்துப் பார்த்திப மகாராஜாவைக் கல்யாணம் செய்து கொண்டதையும் கூறினாள். விக்கிரமனுடைய பின்னைப் பிராயத்தில் அவனுக்குக் குந்தவியை மணம் முடித்து வைக்கத் தான் ஆசைப்பட்டதையும் தெரிவித்தாள். அப்போது குந்தவியின் உடம்பெல்லாம் புளகாங்கிதம் அடைந்தது. ஆனால், பிறகு ராணி, 'அதெல்லாம் கனவாய்ப் போய் விட்டது. பாக்கியசாலியான வேறொரு ராஜ குமாரனை நீ மணந்து சந்தோஷமாய் வாழ்வாய்!' என்று சொன்ன போது குந்தவிக்குக் கோபமே வந்தது.

"இல்லை அம்மா! எனக்கு இல்லறத்தில் பற்று இல்லை. உலகத்தைத் துறந்து நான் சிவவிரதையாகப் போகிறேன்" என்றாள் குந்தவி. அவள் அவ்விதம் கூறியதன் கருத்தை ராணி அறிந்து கொள்ளவில்லை.

பிறகு ஒரு சமயம் குந்தவி, இளவரசர் விக்கிரமன் பல்லவ சாம்ராஜ்யத்துக்குக் கப்பம் செலுத்த இசைந்தால் இன்னமும் திரும்பி வந்து சோழ நாட்டுக்கு அரசராகலாமே என்று சொன்னபோது, அருள்மொழி ராணியின் முகம் அருவருப்பினால் சிணுங்கிற்று. "அதைக் காட்டிலும் விக்கிரமன் செத்துப் போனான் என்ற செய்தி எனக்குச் சந்தோஷத்தையளிக்கும்!" என்றாள்.

மாமல்லபுரத்தில் அருள்மொழி ராணி தங்கியிருக்கும் போதுதான் ஒரு நாளைக்குப்

## சாதா வார்த்தை; செம அர்த்தம்!

| அருஞ்சொல் | | பொருள் |
|---|---|---|
| • தண்ணீர்ப்பந்தல் அமையுங்கள் | : | முதலில் நடைபாதையை ஆக்கிரமித்து முடிந்தால் பின்னர் கடைபோடுங்கள். |
| • என் பிறந்த நாளைக் கொண்டாட ஏழைகளுக்கு உதவுங்கள் | : | தாராளமாக வசூல் செய்யுங்கள். |
| • கட் அவுட்களை என்றுமே விரும்பியது இல்லை | : | அறுபதடிக்கு குறைந்தவைகளை...... |
| • முன்விரோதம் காரணம் | : | எதிரணி வக்கீல் தாக்கப்பட்டால், வேண்டாத வி.ஐ.பி. தங்கியிருந்த ஹோட்டல் நொறுக்கப்பட்டால், முதல்வர் மீது வழக்குத் தொடர கவர்னர் அனுமதி அளித்தால். |
| • புலிகள் நடமாட்டத்தைக் குறைத்தல் | : | கதவைத் திறந்து விடுதல். |
| • நான் பலியாடு ஆக்கப்பட்டேன் | : | சம்பாதித்ததில் சரியான பங்கை |

பழைய சிவனடியார் வந்து மகாராணியைப் பார்த்துப் பேசினார். அவர் பேசி விட்டு திரும்பிப் போகும் சமயத்தில் குந்தவி அவரைப் பார்த்தாள். உடனே பழைய ஞாபகங்கள் எல்லாம் வந்து விட்டன. ராணியிடம் சென்று அந்தச் சிவனடியார் யார் என்று கேட்டாள். யார் என்று ராணியினால் சொல்ல முடியவில்லை. "யாரோ பெரியவர். என் பதி வீர சொர்க்கம் சென்ற பிறகு இவர்தான் எங்களுக்குக் குலதெய்வமாயிருந்து வருகிறார்!" என்றாள்.

குந்தவி மனதிற்குள், "குலதெய்வமில்லை; குலச் சனியன்!" என்று நினைத்துக் கொண்டாள். பின்னால் அருள்மொழித் தேவி காவேரி சங்கமத்தில் கடலில் மூழ்கிய செய்தியும், அவளை யாரோ தூக்கிச் சென்றதாக வதந்தியும் காதில் விழுந்த போது, "தூக்கிக் கொண்டு போனவர் அந்தப் போலிச் சிவனடியாராய்த்தானிருக்க வேண்டும். ஏதோ கெட்ட நோக்கத்துடன் அந்த வேஷதாரி இத்தனை நாளாய் மகாராணியைச் சுற்றியிருக்கிறான்!" என்று நிச்சயம் செய்து கொண்டாள்.

இந்தத் துர்ச் சம்பவத்துக்குச் சில காலத்துக்கு முன்புதான் குந்தவியின் தமையன் இலங்கையை வெற்றி கொண்டு திரும்பி வந்திருந்தான். அவன் தன் சகோதரியிடம் அளவற்ற வாஞ்சை வைத்திருந்தான். குந்தவி தன் உள்ளத்தை ஓரளவு திறந்து காட்டுவதும் சாத்தியமாயிருந்தது. தன் சகோதரியின் மனோநிலையை உணர்ந்து மகேந்திரன் தானே செண்பகத் தீவுக்குப் போய் விக்கிரமனை எந்தச் சாக்கிட்டேனும் திருப்பி அழைத்து வரத் தீர்மானித்தான். இந்த எண்ணத்துடனே அவன் சக்கரவர்த்தியிடம் சாவகம், காம்போஜம், முதலிய கீழ்ச் சமுத்திரத் தீவுகளுக்குப் படையெடுத்துச் செல்ல அனுமதி கேட்டான். சக்கரவர்த்தி இதற்கு சம்மதியாமல், தமக்கே கடற்பிரயாணம் செய்யும் உத்தேசம் இருக்கிறதென்றும், அதனால் மகேந்திரன் யுவராஜ பதவியை வகித்துப் பல்லவ சாம்ராஜ்யத்தைப் பரிபாலிக்கும் பொறுப்பை வகிக்க வேண்டுமென்றும் வற்புறுத்தினார். மகேந்திரன் இதை மறுக்க முடியவில்லை.

இந்த நிலைமையில், குந்தவியின் வற்புறுத்தலின் மேல் மகேந்திரன் மாரப்ப பூபதியைச் சோழ நாட்டின் சேனாதிபதியாக்கியதுடன், அவனை மாமல்லபுரத்துக்கும் தருவித்தான். சிவனடியாரை அவன் கண்டுபிடிக்க வேண்டுமென்றும், அவர் மூலமாக ராணி அருள்மொழித் தேவி இருக்குமிடத்தை அறிய வேண்டுமென்றும் மாரப்ப பூபதிக்குக் கட்டளை பிறந்தது. அதோடு குந்தவியும் மகேந்திரனும் உறையூர் வசந்த மாளிகையில் சில காலம் வந்து தங்கப் போவதாகவும், அதற்கு வேண்டிய ஆயத்தங்கள் செய்ய வேண்டுமென்றும் அறிவிக்கப் பட்டது. அவர்கள் உறையூர் போவதற்குச் சக்கரவர்த்தியும் சம்மதம் கொடுக்கவே, மகேந்திரனும் குந்தவியும் மற்றப் பரிவாரங்கள் புடைசூழ ஒருநாள் பிரயாணம் கிளம்பினார்கள். விக்கிரமன் காட்டாற்று வெள்ளத்தில் அகப்பட்டுத் தப்பிப் பிழைத்த அன்றைக்கு மறுநாள் உச்சிப் போதில், அந்தக் காட்டாற்றுக்குச் சுமார் ஒரு காத தூரத்தில் அவர்கள் வந்து கொண்டிருந்தார்கள். குந்தவி பல்லக்கிலும், மகேந்திரன் குதிரை மேலும் அமர்ந்து பிரயாணம் செய்தார்கள்.

மகேந்திரன் தன்னுடைய இலங்கைப் பிரயாணத்தைப் பற்றியும் அங்கே தான்

| | | |
|---|---|---|
| ● உலகத் தமிழ் மாநாடு | : | மேலிடத்துக்குத் தராததால் சுழற்றி விடப்பட்டேன். |
| ● சபாநாயகர் | : | கடைசியாக ஒரு பேறுவடை. எதிர்க்கட்சியினரைப் பேசவிட்டால் செய் நன்றி கொன்ற பாவத்துக்கு ஆளாகும் நபர். |
| ● விசாரணைக் கமிஷன் | : | எப்பேர்ப்பட்ட மக்கள் பிரச்னையையும் மறக்கடிக்கும் அருமருந்து. |
| ● இந்திய ஒருமைப்பாட்டிற்கு, சிறுபான்மையினருக்கு ஆபத்து | : | மத்தியில் எங்கள் ஆட்சிக்கு ஆபத்து. |
| ● மனித முகத்துடன் பொருளாதாரத் தாராளமயம் | : | பொதுத் தேர்தல் நெருங்குகிறது. |
| ● காவிரி நீர்ப் பிரச்னை | : | மழையில்லாத போதும் தேர்தல் வரும்போதும் மிக முக்கியமான பிரச்னை. |
| ● பெரும்பான்மை மக்களின் அரசு | : | என்ன நடந்தாலும் 5 வருஷத்திற்கு யாரும் மூச்சுவிடக் கூடாது. |

— நாகலை இளவல்

நடத்திய யுத்தங்களைப் பற்றியும் தங்கைக்குச் சொல்லிக் கொண்டு வந்தான். இலங்கை நாட்டின் நீர்வள நிலவளங்களைப் பற்றியும் வர்ணித்தான். குந்தவி வியப்புடன் கேட்டுக் கொண்டு வந்தாள். ஆனாலும் இடையிடையே அவளுடைய ஞாபகம் செண்பகத் தீவின் இரத்தின வியாபாரியின் மீது சென்று கொண்டிருந்தது. இது அவளுக்கே ஆச்சரியத்தை அளித்தது. அந்த இரத்தின வியாபாரி வராமல் போனதினால்தான் என்ன, எதற்காகத் தன் மனம் அவ்வளவு கவலையுறுகிறது என்று ஆச்சரியப்பட்டாள். அவன் தனக்குச் செண்பகத் தீவு என்று சொன்னபடியால், சோழ ராஜகுமாரனைப் பற்றி அவனிடம் விசாரிக்கும் ஆவல்தான் காரணம் என்று தன்னைத்தானே சமாதானம் செய்து கொண்டாள்.

"இல்லை; இல்லை; அவர்கள் இருவருக்கும் உள்ள முக ஒற்றுமைதான் காரணம்!" என்று ஒரு மனம் சொல்லிற்று. "ஆனால் அது உண்மையா? அல்லது நம்முடைய கண்கள்தான் நம்மை ஏமாற்றி விட்டனவா? உண்மையில் அத்தகைய முக ஒற்றுமையிருந்தால், அப்பா அதைக் கவனித்திருக்க மாட்டாரா? கவனித்திருந்தால் அவனை வழிப்பறிக்காரர்களிடமிருந்து காப்பாற்றி உறையூருக்கு அனுப்பி வைத்திருப்பாரா? அதெல்லாம் இல்லை; நம்முடைய பிரமைதான் காரணம்!" என்று இன்னொரு மனம் சொல்லிற்று. இத்தகைய எண்ணங்களுக்கு மத்தியில், "உறையூரில் ஒருவேளை அந்த இரத்தின வியாபாரியைச் சந்திப்போமா?" என்ற நினைவும் அடிக்கடி தோன்றிக் கொண்டிருந்தது.

இப்படியெல்லாம் குந்தவி தன் மனத்திற்குள் எண்ணமிட்டுக் கொண்டும், ஒரு காதில் மகேந்திரனுடைய பேச்சைக் கேட்டு 'ஊங்' கொட்டிக் கொண்டும் பிரயாணம் செய்து கொண்டிருக்கையில், அவர்களுக்கு எதிரே திடீரென்று தோன்றிய ஒரு காட்சி அவளை ஒரே அடியாகத் தூக்கிவாரிப் போட்டது. இத்தனைக்கும் அந்தக் காட்சி வேறொன்றுமில்லை; சேணம் போட்டு அலங்கரிக்கப்பட்டிருந்த ஒரு உயர்ந்த ஜாதிக் குதிரை முதுகில் ஆள் இல்லாமல் தனியாக வந்து கொண்டிருந்த காட்சிதான். அதைக் கண்டு ஏன் அவ்வாறு குந்தவி திடுக்கிட வேண்டும்? - அவளுக்கே தெரியவில்லை. குதிரை இன்னும் அருகில் வந்தது. அது அவளுடைய தந்தையின் குதிரைதான் என்பது ஐயமறத் தெரிந்தது. சில சமயம் சக்கரவர்த்தி அதில் ஏறி வந்திருப்பதை அவளே பார்த்திருக்கிறாள், அது எப்படி இங்கே வந்தது? ஒருவேளை, அப்பாதான்...? அவ்விதம் இருக்க முடியாது. அப்பாவிடம் காஞ்சியில் விடை பெற்றுக் கொண்டுதானே கிளம்பினோம்? நமக்கு முன்னால் அவர் எப்படி வந்திருக்க முடியும்? வந்திருந்தாலும் குதிரை ஏன் இப்போது தனியாக வருகிறது?... சட்டென்று ஒரு விஷயம் ஞாபகம் வந்தது. இரத்தின வியாபாரிக்குக் குதிரையும் கொடுத்து அனுப்பியதாக அப்பா சொன்னாரல்லவா? குதிரைக்குப் பதிலாக அவன் கொடுத்த இரத்தினங்களையும் காட்டினாரல்லவா? ஆமாம்; இரத்தின வியாபாரி ஏறிச் சென்ற குதிரையாய்த்தான் இருக்க வேண்டும். ஆனால், அது ஏன் இப்போது தனித்து வருகிறது? இரத்தின வியாபாரி எங்கே? அவன் என்ன ஆனான்?.... குந்தவியின் அடிவயிறு அப்படியே மேலே கிளம்பி அவளுடைய மார்பில் புகுந்து மூச்சை அடைத்து விட்டது போலிருந்தது.

(தொடரும்)

**சா**மிநாத வாத்தியாரைப் பார்த்ததுமே என் உடம்புக்குள் 'பகீரும்' அடித் தொடையில் சிலிர்ப்பும் வந்து விட்டது. ஒன்றா இரண்டா எத்தனை 'கிள்ளல்'கள்!

தளர்ந்திருந்தார். குரல் மட்டும் பழைய கணீர். தலை ஏதோ புது வகை வெள்ளைத் தாவரம் போல் அடர்ந்திருந்தது.

எழுந்து நின்றேன்.

"சொல்லுங்க ஸார்."

"என்கிட்ட படிச்சில்ல?" என்றார்.

அக்பர், ஹர்ஷர் என்று அவர் சொல்லிக் கொடுத்த தகவல்கள் சுத்தமாய் மறதி.

"என்கிட்ட படிச்ச பையன் நல்ல போஸ்ட்ல இருக்கறதைப் பார்த்து ரொம்ப சந்தோஷம்பா."

'ஆமாம்' என்பது போல தலையசைத்தேன்.

சங்கடமான அமைதி. அப்போதே வகுப்பில் அவர் சொல்வதை நாங்கள் கேட்க வேண்டும். குறுக்கே பேசினால், ஒன்று பிரம்படி - அல்லது அருகே அழைத்து, டிராயரை விலக்கி, உள்ளே விரல்களால் ஊடுருவி அழுத்தமாய், கண்ணில் நீர் வர, ரத்தம் கண்டிய கிள்ளல்!

படிக்காமல், எழுதாமல், கேள்விக்குப் பதில் சொல்லாமல் விட்டதற்கே இந்தத் தண்டனை என்றால் 'கோமளா' விஷயம் அவர் காதுக்கு எட்டிய போது எப்படி இருந்திருக்கும்!

**இ**ப்போது கூட வியர்த்தது. இன்றைய தினம் காலை போலத் துல்லியமாய்க் காட்சிகள்.

காலை வகுப்பிற்கு அத்தனை சீக்கிரமாய் வந்திருக்க வேண்டியதில்லை. அதுவும் அமாவாசை தர்ப்பித்து விட்டுத்தான் (முதல் வகுப்பு விடுமுறை) ஸ்கூல் ஆரம்பிக்கும் என்ற போது....

நான், குமார், கோமளா மட்டும் வகுப்பில் ஆஜராகி விட்டோம். குமார், படிப்பு தவிர, மற்ற 'எல்லாம்' வந்து விட்ட வயதுக்கு மீறிய தடியன்.

கோமளாவிடம் என்ன சொல்லி பயமுறுத்தினானோ, சொன்ன நேரத்துக்கு புது பட்டுப் பாவாடை சரசரக்க வந்து விட்டாள். கண்ணாடி வளையல்களின் ஜலீர்.

எனக்குக் குளிர் ஜுரம் போல உள்ளுக்குள் உதற குமார் விரைப்பாய் அவளைப் பார்த்தான்.

"நீ தப்பு விட்டில்ல. அந்தக் கேள்விக்குப் பதிலை பிஃப்டி டைம்ஸ் எழுதணுமாம். சொல்லச் சொன்னார்."

"நான் நேத்து கிளாஸ்லதானே இருந்தேன்..." என்றாள் சந்தேகமாய்.

"ஈவினிங் பெல் அடிச்சதும் என்னைக் கூப்பிட்டு... உன்கிட்டே சொல்லச் சொன்னார். உனக்கு நம்பிக்கை இல்லேன்னா நீயே போய் அவரைக் கேளு."

குமாரின் அலட்சியம் கோமளாவை யோசிக்க விடவில்லை. சாமிநாத வாத்தியாரிடம் யார் போய்க் கேட்பது!

"வேணும்னா ஒரு ஹெல்ப் பண்றோம். உன்னால முடிஞ்ச அளவு நீ எழுது. மீதியை இவன் உன் கையெழுத்து மாதிரியே எழுதித் தருவான்" என்றான் என் பக்கம் கையைக் காட்டி.

எனக்கு இன்னும் வேகமாக உதறியது.

"நான்... நான்..."

"பார்த்தியா! அவனுக்கும் இஷ்டம் இல்லே. நான் சொன்னாக் கேட்பான்."

"ப்ளீஸ்... சொல்லுடா!"

"சொல்லு - டாவா?"

"இல்லே... சொல்லு...."

"எனக்கு என்ன லாபம்?"

"ஈவினிங் போகறச்சே பாய் கடைல ஏதாச்சும் வாங்கித் தரேன்."

குமார் பெரிதாய்ச் சிரித்ததற்கு எனக்கு வியாக்கியானம் புரிந்ததும் இன்னும் உதறியது.

"சரி. நீயே சொல்லு. என்ன வேணும்?" என்றாள் லேசாய் முகம் சிணுங்கி.

"அப்புறம் எங்களை மாட்டி விட்டுரக் கூடாது."

"சரி."

"பிராமிஸ்?"

"பிராமிஸ்!"

குமார் சொன்னது எனக்குக் கேட்டது போலவும் கேட்காத மாதிரியும் பிரமை தட்டியதற்குக் காரணம் அவன் கேட்ட விஷயம்தான். தலா ஒரு முத்தம்!

இன்று வரை அதன் தாத்பர்யம் எனக்குப் புலப்படவில்லை. அற்பத்தனமா அல்லது வயசுக்கு மீறிய நடத்தையா... எது

அவனைத் தூண்டியதோ.

கோமளா திடுக்கிட்டு விழித்தான்.

"ஏய், பிராமிஸ் பண்ணியிருக்கே. மாட்டி விட்டுரக் கூடாது!"

குமார் வார்த்தை வெளிப்பட்ட மறுவினாடி துல்லியமாய் மிரண்டு போயிருந்தான்.

"நான் போறேன்" என்றான்.

"இம்போசிஷன்?"

பதில் இல்லை. கோமளாவை வெளியில் அனுப்புவதா, கூடாதா என்று சாலமன் பாப்பையா இல்லாத பட்டிமன்றம் குமார் மனசுக்குள் நடப்பது தொண்டைக் குழிக்குள் புரிய நான் வெளிநடப்பு செய்ய வாகாகக் காலைத் திருப்பியிருந்தேன்.

"நில்லுடி!"

குமாரின் தப்பான பிரயோகம், கோமளாவிற்குப் பலத்தைக் கொடுத்து விட்டது.



**ச**ம்பவம் நிகழ்ந்ததா என்று சந்தேகப்படும் அளவு 'எதுவுமே நிகழாத' மாதிரி ஒரு அமைதி.

"உன்னாலதான். உன்னாலதான்" என்று லோகல் ஆர்க்கெஸ்ட்ராவுடன் நான் பயத்தில் பாடினேன். வகுப்பு ஆரம்பிக்கும் வரை.

ஆனால் கோமளா எனக்குச் சாதகமாய்ப் பேசி விட்டான். குமாரின் தகாத வார்த்தையும் 'சாட்சி'யாக நானும் என்று கேஸ் உருவெடுத்தது. சாமிநாத வாத்தியாரின் பிரம்படி குமாருக்கும், 'நீ ஏன்டா பேசாம இருந்தே!' என்று தொடையில் கிள்ளோடு தப்பித்துக் கொண்டேன். ஒழுக்கமும் நேர்மையும் அவர் கண்கள்.

**"உ**ங்க ஸன் என்ன பண்றார், ஸார்?" என்றேன் என் மனத்தைப் படித்து விடப் போகிறார் என்ற நடுக்கத்துடன்.

"இருக்கான்."

குரலில் தொய்வு.

"என்ன படிச்சிருக்கார்?"

"ப்ச... ஏறலே!"

சரி. இந்த விஷயம் வேண்டாம் என்று விடப் போனேன். குரலை செருமிக் கொண்டார்.

"அவனாலதாம்பா... இப்ப என் நிம்மதியே போச்சு."

"எ... என்ன ஸார்?"

"படிப்பு வரலே. போக்கிரி சகவாசம். ரொம்ப ஆட்டம் போட்டுட்டு இப்ப மனசு மாறி அழறான். வேலை கிடைக்கலே!"

பார்த்துக் கொண்டிருந்தேன்.

நேர்மையற்ற செயல்கள் எதுவுமே சுத்தமாய்ப் பிடிக்காத - சிபாரிசு என்ற வார்த்தையை விஷமாய் வெறுக்கிற - நெருப்பாய்ச் சீறி, தொடையை நிமிண்டுகிற சாமிநாத வாத்தியார் - இரு கைகளையும் அந்த வினாடி கூப்பினார்.

"அவனுக்கு ஏதாச்சும் ஒரு வேலை பார்த்து வையேன்... கெஞ்சிக் கேட்கறேன்."

என் இதயம் நிமிண்டப்பட்டது.

ரிஷபன்



# பராமரிப்பின்றி வாடுகிற கூந்தலுக்கு அழகுண்டோ?



கோலின்
ஃபிலிம் ஹேர் ஸ்டைலிஸ்ட்

உங்கள் கூந்தல் பராமரிப்பின்றி வாடுகிறதா என்பதைக் கண்டறிய இதோ ஒரு சுலபமான வழி. குளித்த பிறகு தலை வாரும்போது சிக்குகள் இருக்கிறதா என்று பாருங்கள். சிக்குகள் இருந்தால் கூந்தல் வலுவற்றும், பராமரிப்பின்றி வாடுவதாகவும் அர்த்தம்.

இந்நிலை கூந்தலை சோப்பாலும், சாதாரண ஷாம்பூக்களாலும், மற்ற சாதாரண பொருட்களாலும் கழுவுவதால் கூந்தலின் இயற்கை நலன்களும், ஈரப்பதமும் வற்றிப்போய் ஏற்படுகிறது. மேலும் கூந்தலை சாதாரண பொருட்களால் கழுவும்போது அழுத்தித் தேய்ப்பதால் அது சேதமடையவும் கூடும்.

எனவே சிக்குகளை சீப்பால் சீவி எடுக்க முயற்சிக்காதீர்கள். வலுவற்ற முடிகள் அதனால் உடைந்து போகக்கூடும். அதற்குப்பதில் கூந்தலுக்கு அளியுங்கள் :

## புதிய ஸன்ஸில்க் ஆஃப்டர்வாஷ் கண்டிஷனர்
## கூந்தலுக்கு விசேஷ ஊட்டு

புதிய ஸன்ஸில்க் ஆஃப்டர் வாஷ் கண்டிஷனர், குளித்த பிறகு கூந்தலுக்கு பராமரிப்பு தேவைப் படும்போது செயல்புரியும். சிக்குகளை இதமாய் அகற்றி, கூந்தல் சேதமடையாமல் பாதுகாத்து மென்மையாகவும், அழகாகவும் ஆக்கும்.



குளித்த பிறகு கூந்தலிலுள்ள அதிகப்படி நீரை பிழியவும். தேவையான அளவு ஸன்ஸில்க் ஆஃப்டர்வாஷ் கண்டிஷனர் எடுத்து கூந்தல் முழுவதும் தடவவும் நுரைக்காது



இரண்டு நிமிடம் நியூட்ராகேர் நலன்களை கூந்தல் எடுக்க விடுங்கள்.



பிறகு அலசுங்கள். நன்கு பராமரிப்பு பெற்ற கூந்தல் தொட்டால் வழுவழுப்பாக இருக்கும். டவலால் தலையை துவட்டி லேசான ஈரத்தில் சீவவும். இப்போது முடி உடைந்துவிடும் என்கிற கவலை வேண்டாம். கூந்தல் சிக்குகள் அற்றும், வலுவாகவும், நல்ல பராமரிப்பு பெற்றும் இருக்கும்.



பிறகு வழக்கம்போல் கூந்தலை காய வைக்கவும். ஸன்ஸில்க் ஆஃப்டர்வாஷ் கண்டிஷனரின் நலன்கள் கழுவிய பின்னரும் நீண்ட நேரம் கூந்தலில் தங்கும். அதனால் கூந்தல் சிக்குகளற்றும், வலுவாகவும் இருக்கும்.

இதமாய் தழுவும் மென்மை, இதுவரைக் கண்டிராத அழகுடன் திகழும் கூந்தலைப் பெற நேரம் வந்து விட்டது.

ரூ. 2/- விலையுள்ள சிக்கனமான சாஷேயைப் பயன்படுத்திப் பாருங்கள்.


Sunsilk
CONDITIONER
Sunsilk
CONDITIONER
ஸன்ஸில்க்
கண்டிஷனர்
நியூட்ராகேர் உள்ளது.
"இதமாய் தழுவும் மென்மை இதுவரைக் கண்டிராத அழகான கூந்தல்."
HTA.2963.95

# மணிக்கொடி

**65** அன்புள்ள நண்பரே,

நமஸ்கார். வெள்ளையரை எதிர்த்துப் போராடும் பணியில் உள்ள ரிபப்ளிகன் ஆர்மியின் தளபதிகளுள் ஒருவன் இதைத் தங்களுக்கு எழுதுகிறேன். தங்கள் பேத்தி பவித்ரா அண்மையில் எங்கள் பெண் படையினருடன் சேர்ந்து வெள்ளைக்காரர்களுடன் நிகழ்த்திய சிறு போரின் போது உயிரிழந்து வீர சொர்க்கம் அடைந்த செய்தியை மிகுந்த வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.... தங்கள் குழந்தைகளை இவ்வாறு தேசப்பணியில் அர்ப்பணிக்கும் தங்களைப் போன்றவர்களைப் பாரத மாதா என்றும் வாழ்த்துவாள். இந்தியா சுதந்திரம் அடையும் நாள் வெகு தொலைவில் இல்லை என்பதைப் பவித்ரா போன்ற பெண்கள் எங்களுக்கு உணர்த்தி வருகின்றனர். இப்பேரிழப்பைத் தாங்கும் சக்தியைத் தாங்கள் பெற நாங்கள் பிரார்த்திக்கிறோம்....

தங்கள் அன்புள்ள,

..............................

முதல் முறை படித்த போது கங்கா அதிர்ச்சியில் இருந்தான். இரண்டாவது முறை படித்த போது அழுகையில் இருந்தான். சமையல் புத்தகத்தை எடுக்கும் ஆர்வம் செத்துப் போய்க் கடிதத்துடன் மெல்லப் பரணியிருந்து இறங்கினான்.

தன்னறைக்குப் போய்க் கதவைச் சாத்திக் கொண்டு மூன்றாவது முறை படித்து விட்டு அப்படியே படுக்கையில் விழுந்தான்.

"பவித்ரா, பவித்ரா, எங்கிட்ட சொல்லிக்காம நீ போன வருத்தமே என்னை விட்டுப் போகல்லே. அதுக்குள்ள ஒரேயடியா என்னை விட்டுட்டுப் போயிட்டியே...' - இதையே திரும்பத் திரும்பப் புலம்பியபடி தலையை உருட்டிக் கொண்டு தாங்க முடியாத துயரத்துடன் கங்கா புரண்டான்.

சரியாக ஐந்து நிமிடங்கள் கழித்து எழுந்தான். அறையை விட்டு வெளியே வந்தான். வெளியே போயிருந்த ராமசாமி இன்னும் திரும்பி இருக்கவில்லை. விசாலம் இன்னும் அதே நிலையில் அரை வாய் திறந்தபடி தூங்கிக் கொண்டிருந்தாள். ரமணியும் வெளியே போயிருந்தது அவனுக்கு வாய்ப்பாக இருந்தது. அழுதது தெரியாமலிருக்கக் குளியலறைக்குள் புகுந்து கொண்டு குளிக்கத் தொடங்கினான். தலையில் ஊற்றிக் கொண்ட தண்ணீருடன் அவனது கண்ணீரும் தொடர்ந்து வழிந்து கொண்டே இருந்தது. தனது சோர்ந்த முகம் அப்பட்டமாய்த் தெரிந்து விடக் கூடாது என்பதற்காகக் குளித்துக் கொண்டிருந்த அவனுக்கு ஒருவரின் சாவுச் செய்தி தெரிந்ததும் குளிக்கும் வழக்கம் ஞாபகம் வந்தது.

'சுதந்திரப் போராட்டத்துல வாஞ்சிநாதன் மாதிரி நான்தான் போயிடப் போறேன்னு நெனச்சுண்டிருந்தேன். அது மாதிரி நான் போயிட்டா உன்னோட வாழ்க்கை பாழாப் போயிடுமேன்னுதான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்க முடியாதுன்னேன். இப்ப? என்னோட வாழ்க்கையைப் பாழாக்கிட்டு நீ போயிட்டியே, பவித்ரா. என் பவித்ரா...''

தண்ணீரும் கண்ணீரும் கலந்து ஓட ஒரு வழியாய்க் குளித்து முடித்து விட்டு அவன் வெளியே வந்த போது எதிர்ப்பட்ட விசாலம், "என்னடா மத்தியானத்துல குளியல்? ஏன் கண்ணெல்லாம் செவந்திருக்கு?'' என்றாள்.

"சோப்புப் பட்டுடுத்து அத்தே.''

அவன் தனிமையை நாடித் தன்னறைக்குப் போய்க் கதவைச் சாத்திக் கொண்டு மறுபடியும் அந்தக் கடிதத்தைப் படித்து விட்டுத் தன் அலமாரியில் பத்திரப்படுத்தி விட்டுப் படுத்துக் கொண்டான். பவித்ராவோடு தனக்கு அறிமுகம் ஏற்பட்ட நாளிலிருந்து தொடங்கி அவன் ஞாபகத்தில் பதிந்து போயிருந்த நிகழ்ச்சிகள் யாவும் வரிசையாகப் படங்களாய் நகர்ந்தன.

வெளியே போயிருந்த ராமசாமி மூன்றரை மணிக்குத் திரும்பி வந்தார். பரணுக்குக் கீழே அதில் ஏறுவதற்கென்றே போல் போட்டு வைக்கப்பட்டிருந்த உயர்ந்த முக்காலியும், தள்ளினாற்போல் தாம் வைத்திருந்த டிரங்குப் பெட்டி முன்னடிக்கு நகர்ந்திருந்த நிலையும் அவருக்கு உண்மையை உணர்த்தின.

"கங்கா எங்கேக்கா?''

"குளிச்சுட்டுப் போய் ரூம்ல இருக்கான்.''

"குளிச்சானா!''

"ஆமா.''

அவர் மெதுவாகப் போய் அவன் அறை வாசலில் நின்றார்.

கதவு உட்பக்கம் தாழிடப்பட்டிருந்தது.



ஜோதிர்லதா கிரிஜா

தட்டுவதற்கு அவருக்குத் துணிவு வரவில்லை. கதவைப் பார்த்தபடி சில விநாடிகளுக்கு அப்படியே நின்று கொண்டிருந்தார். 'கங்காவிடம் இனி கதந்திரம் கிடைத்த பிறகும் கல்யாணப் பேச்சை எடுக்கவே முடியாது' என்று நினைத்துப் பெருமூச்சு விட்டார். 'அவன்தானா மனசு மாறிக் கல்யாணம் பண்ணிக்கலாம்னு முடிவெடுத்தாத்தான் உண்டு... ஆனா அது ஒருநாளும் நடக்கப் போறதில்லே...'

அவர் கதவைப் பார்த்துக் கொண்டே நின்றிருந்த அந்த நேரத்தில் கங்கா அதைத் திறந்து கொண்டு திடீரென்று வெளியே வந்தான். இருவர் பார்வைகளும் சந்தித்துக் கொண்டன.

"கங்கா, உள்ள போய்ப் பேசலாம்" - அவர் அவனது அறைக்குள் நுழைந்தார். அவனும் சென்றான்.

அவனது கட்டிலில் உட்கார்ந்த ராமசாமி, "உங்கிட்ட சொல்றதுனால உனக்கு வீண் மனக்கஷ்டம்கிறதுனாலதான் சொல்லாம இருந்தேன். ராஜாராமன் அந்தக் கவரை எங்கிட்டக் குடுத்து வெச்சிருந்தார்."

"அவாத்துல மத்தவாளுக்கெல்லாம் தெரியுமாப்பா?"

"யாருக்குமே தெரியாது."

"அவாளும் தெரிஞ்சுண்டே எங்கிட்ட தெரியாத மாதிரி நாடகம் போட்டாளோன்னு நெனச்சேன்."

"உங்கிட்ட சொல்லி என்ன லாபம்னு தான் சொல்லல்லே. நீ அந்தப் பொண்ணு மேல ஆசைப்பட்டதை ராஜாராமன் சொன்னார். அதனாலதான். மத்தப்படி உங்கிட்டேருந்து அதை மறைக்கணும்கிற எண்ணத்துனால இல்லே, கங்கா. முடிஞ்சவரைக்கும் உன் மனக்கஷ்டத்தை ஒத்திப் போடணும்கிற ஒரே எண்ணத்தான்."

கங்கா தலையைக் குனிந்து கொண்டான். மறுபடியும் நிறைந்து போன விழிகளிலிருந்து கண்ணீர் உதிரத் தொடங்கிற்று. கங்கா அழுது பார்த்தே இராத அவருக்கு அதிர்ச்சியாகவும் வேதனையாகவும் இருந்தது.

அவன் தோளில் ஆதரவாய்க் கைவைத்து, "வருத்தப்படாதே, கங்கா. என்ன செய்யலாம்? நாம குடுத்து வெச்சது அவ்வளவு



# நெஞ்சை அள்ளும் தஞ்சை வாசகர்களே நினைவுபடுத்துகிறோம்!

உங்களுக்கு தமிழென ஒரு செய்தி! கோவையை அடுத்து உங்கள் மாவட்ட படைப்புகளுக்குத்தான் பிரத்தியோகமாய் இடம் அளிக்கப் போகிறோம். கல்கியின் 'நெஞ்சை அள்ளும் தஞ்சை' பகுதியில் இடம்பிடிக்க உங்கள் படைப்புகளை அனுப்புங்கள்.

**விதிகள் மிக எளிமையானவை :**

- இப்போது தஞ்சை மாவட்டத்தில் வசிப்பவர்கள் மட்டுமே எழுதலாம்.
- எழுதும் விஷயங்கள், ஜோக், துணுக்கு, உண்மைச் சம்பவம், புது/மரபுக் கவிதை, மாணவர் நியூஸ், என எதுவாயினும் போஸ்ட் கார்டில் மட்டுமே எழுதலாம்.
- பளிரென்று கவர்ந்திழுக்கும் வண்ணமாக உங்கள் படைப்பு அமைய வேண்டும்.
- கல்கி ஆசிரியர் குழுவினர் தேர்ந்தெடுக்கும் தஞ்சை மாவட்டப் படைப்புகள் 'நெஞ்சை அள்ளும் தஞ்சை' பகுதியில் இடம் பெறும்.
- பிரசுரமாகும் படைப்புகளுக்குச் சன்மானம் உண்டு.
- உங்கள் படைப்புகளின் தரத்தைப் பொறுத்து அதிகபட்சமாக நான்கு வாரங்கள் வரை இப்பகுதி தொடர்ந்து வெளியாகும்.
- தலைசிறந்த படைப்புக்குச் சிறப்புப் பரிசு உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- ஒருவர் எத்தனை படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம். போஸ்ட் கார்டு முகவரிப் பகுதியில் 'நெஞ்சை அள்ளும் தஞ்சை' என்று குறிப்பிடவும்.
- தஞ்சை பக்கங்களில் இடம் பிடிக்க முந்திக் கொள்ளுங்கள்!

மற்ற மாவட்ட வாசகர்கள் இப்போதே யோசிக்கத் தொடங்கலாமே!

— **ஆசிரியர்**

---

தான்" என்றார்.

வேட்டிமுனையால் கண்களைத் துடைத்துக் கொண்ட கங்கா, "அத்தைக்கு இனிமே நாம கொஞ்சம் எடுபிடி வேலையெல்லாம் பண்ணி ஒத்தாசையா இருக்கணும்கிறதோட, சமையலும் கத்துக்கணும்னு திடீர்னு ஒரு எண்ணம் வந்தது. நம்மாத்துல இந்து பாக சாஸ்திரம் ஒரு பழைய புஸ்தகம் இருந்ததில்லியா? அதை எடுக்கிறதுக்காகத்தான் பரண்ல இருக்கிற பெட்டியை நகத்தினேன்...." என்றான்.

அவர் ஒண்ணும் கூறாதிருந்தார்.

"கடைசியில அதை எடுத்துக்காமயே இறங்கிட்டேன். மறந்து போயிடுத்து."

**கா**ந்தி - ஜின்னா பேச்சு வார்த்தைகள் 1944 செப்டெம்பர் 9-ஆம் நாள் தொடங்கின. 27-ஆம் நாள் முடிந்தன. ஆனால் ராஜாஜியின் திட்டத்தை ஜின்னா முழுவதுமாக ஏற்கவில்லை. ஏற்கப்படாமைக்கு முக்கியமான இரண்டு காரணங்களில் ஒன்று - இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு பிரிவினையைச் செயல்படுத்தலாம் என்பது காந்திஜியின் கருத்தாக இருக்க, அதற்கு முன்னாலேயே பிரித்தாக வேண்டுமென்பது ஜனாப் ஜின்னாவின் கருத்தாக இருந்தது. அடுத்ததாக, அயல் நாட்டு விவகாரங்கள், தகவல் தொடர்பு இலாகா, நாட்டுப் பாதுகாப்பு, வணிகம், சுங்க இலாகாக்கள் இரு நாடுகளுக்கும் பொதுப் படையாக இருந்தாலே இரு நாடுகளுக்கும் நல்லதாக இருக்கும் என்ற காந்தியடிகளின் கூற்றையும் ஜனாப்ஜின்னா ஒப்புக் கொள்ளவில்லை.

இந்தப் பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருக்கையில் விநாயக் தாமோதர் சாவர்க்கர் காந்தியடிகளையும் ராஜாஜியையும் மிகக் கடுமையாக விமர்சித்தார். 'இந்திய மாகாணங்களை தங்கள் விருப்பம் போல் யாருக்கும் தூக்கிக் கொடுப்பதற்கு, அவை காந்திஜியுடையவும் ராஜாஜியுடையவும் தனிப்பட்ட சொத்துக்களா என்ன?'

1945-ல் நேதாஜியின் இந்திய தேசிய ராணுவம் கைப்பற்றி இருந்த மோடக்கைப் பிரிட்டன் தன் வசமாக்கிக் கொண்டு விட்டது. ஜப்பான் ரங்கூனிலிருந்து பின்வாங்கியது. பிரிட்டன் ரங்கூனையும் தன் பிடிக்குள் கொண்டு வந்தது. இந்திய தேசியப் படை வீரர்கள் பிரிட்டனின் போர்க் கைதிகள் ஆனார்கள். ரங்கூன் பிரிட்டனின் வசப்பட்ட பின் மூன்றாம் நாளில் ஜெர்மனி செயலற்றுச் சரணடைந்து விட்டது. அதே நாளில் சுபாஷ் சந்திரபோஸ் வேறிடத்தி

லிருந்து மறுபடியும் திட்டமிட்டு இந்திய சுதந்திரப் போராட்டத்தைத் தொடரும் எண்ணத்துடன் பாங்க்காக் போய்ச் சேர்ந்தார். இருபத்தொரு நாட்கள் நடந்து அவர் தமக்கு விசுவாசமுள்ள சில தோழர்களுடன் பாங்காக்கைச் சென்றடைந்தது செயற்கரிய செயலாகும்.

பின்னர் பாங்க்காக்கிலிருந்து டோக்கியோ செல்லுவதற்காக நேதாஜி விமானத்தில் புறப்பட்டார். செல்லும் வழியில் ஃபார்மோசாவில் உள்ள 'தாய்பே'யில் ஆகஸ்டு 18ஆம் நாளில் அவரது விமானம் தரை இறங்கியது. உணவு அருந்திய பிறகு சுபாஷ் திரும்பவும் விமானத்தில் தாய்பேயை விட்டுக் கிளம்பினார். அதன் பிறகு விமானத்துக்கு என்ன நேர்ந்தது என்பது உறுதியாகத் தெரியவில்லை. அவர் சென்ற விமானம் தீப் பிடித்ததில் விபத்துக்குள்ளாகி, இதனால் சுபாஷ் இறந்தார் என்று ஜப்பான் ரேடியோ ஒலிபரப்பிய செய்தியில் உண்மை இல்லை எனும் வதந்தி பரவிற்று. எனினும் அதன் பிறகு சுபாஷ் எனும் போராளி யார் கண்களுக்கும் தென்படவில்லை.

இதற்கு முன்னால், அதாவது ஜனவரியில், ராஷ்பிகாரிபோஸ் ஜப்பானில் காலமாகி இருந்தார்.

அதே ஆகஸ்டில்,

ஹிரோஷிமா, நாகசாகி ஆகிய ஜப்பானின் நகரங்களில் அமெரிக்கா அணுகுண்டுகளை வீசி அவற்றை சர்வநாசப்படுத்தியதும், ஜப்பானும் சரணடைய, உலகப் போர் நிச்சயமான ஒரு முடிவுக்கு வந்தது.

இந்தக் காலகட்டத்தில் பிரிட்டனில் நடைபெற்ற பொதுத் தேர்தலில் தொழிற்கட்சி பெரும்பான்மை வலிமை பெற்று அட்லியை முதலமைச்சராய்க் கொண்ட அமைச்சரவையை அமைத்தது.

இதனிடையில், இந்தப் போரில் பிரிட்டனிடம் பிடிபட்ட, இந்திய தேசிய ராணுவப் படைவீரர்கள் சுமார் 20,000 பேர் மீதும், போர்ப்படை அதிகாரிகளாகிய ஷா நவாஸ், தில்லான், செய்கால் ஆகிய மூவர் மீதும் பிரிட்டனின் இந்திய அரசு வழக்குத் தொடுத்தது. இந்த அதிகாரிகள் மூவரும் முறையே இந்து, முஸ்லீம், சீக்கிய மதங்களைச் சேர்ந்தவர்கள். எதிரிகளின் படையில் சேர்ந்து தேசத் துரோகம் செய்ததாக இவர்கள் மேல் சுமத்தப்பட்ட குற்றத்தை ஆட்சேபித்து நாடெங்கிலும் ஆர்ப்பாட்டங்களும் கடையடைப்புகளும் நிகழலாயின. சர் தேஜ் பகாதூர் சாப்ரு, ஜவாஹர்லால் நேரு, புலாபாய் தேசாய், ஆசப் அலி, குன்வர் சர் திலீப் சிங் ஆகிய ஐவரும் இவர்கள் சார்பில் வக்கீல்

களாகி வழக்காடினர். சில தேசியத் தலைவர்களும் சர்க்காருக்கு எதிரான ஆவேசமூட்டும் பேச்சுக்களிலும், ஆர்ப்பாட்டங்களிலும் ஈடுபட்டு, அவர்களுக்கு நியாயம் வழங்கப்படாவிட்டால், மறுபடியும் ஒரு சட்ட மறுப்பு இயக்கம் தொடங்கப்படும் என்று அரசை அச்சுறுத்தலாயினர். மதவேறுபாடு இன்றி இதில் அனைத்துக் கட்சிகளும் ஒன்றுபட்டன.

நாடு முழுவதும் அதைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தது.

**“வா,** கங்கா. உக்காரு...."

அமராவதியைப் பின்தொடர்ந்து போய், கங்கா நாற்காலியில் அமர்ந்தான். கம்பளியில் முழுக்கைச் சட்டை பின்னிக் கொண்டிருந்த அஞ்சனா அதை மேசை மீது போட்டுவிட்டு அவனுடன் பேசத் தயாரானாள். ராஜாராமய்யரின் மறைவுக்குப் பிறகு இருவரும் இளைத்தும் களை இழந்தும் காணப்பட்டதைக் கங்கா கசப்புடன் மனத்தில் வாங்கிக் கொண்டான். "நரேன்கிட்டேருந்து லெட்டர் வந்ததா?"

"வந்தது. ஒண்ணும் விசேஷமா இல்லே. அதான் சென்சார் பண்றாளே? என்னத்தை எழுதுவார்? சும்மா, 'நான் சவுக்கியம், நீ சவுக்யமா'ன்னு எழுதிண்டிருக்கோம்."

"இன்னும் ரெண்டு நாள்ல மெட்றாஸ்ல ஒரு கலாட்டா இருக்கும். அதுல கலந்துக்கப் போறோம்."

"என்ன கலாட்டா? 'கலந்துக்கப் போறோம்'னா, யாராரு?"

"ரமணியும் நானும்தான். அப்பாவை வர வேண்டாம்னுட்டோம்."

"எதுக்கோசரம் கலாட்டா?"

"டில்லியில ஆர்மி ஆபீசர்ஸுக்கு எதிரா கேஸ் நடக்கிறதோல்லியோ? அதுல அவாளுக்கு மோசமான தண்டனை குடுத்துடுவான்னு ஒரே வதந்தியா இருக்கு. அவா எல்லாருமே தேசபக்தர்கள். அவாளுக்கு எந்த தண்டனையும் தரக்கூடாதுன்னுதான்."

இரண்டு பெண்களும் மவுனமாக இருந்தார்கள்.

"அப்புறம் ஒரு விஷயம்..."

அவன் குரல் சன்னமாகி விட்டதையும் அதில் தென்பட்ட தயக்கத்தையும் கவனித்து, "என்ன, கங்கா? சும்மா சொல்லு," என்றாள் அமராவதி.

"வேற ஒண்ணுமில்லே... எனக்கும் பவித்ராவோட' ஃபோட்டோ இருந்தா ஒண்ணு வேணும்."

அமராவதி, சிரித்து விட்டு, "ஓ. அதுக்கென்ன? தரேனே!" என்று எழுந்து உள்ளே போனாள்.

அஞ்சனா அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் முகம் தாழ்ந்திருந்ததும் அதில் வெட்கத்துக்குப் பதில் துயரம் படிந்திருந்ததும் அவள் கவனத்துக்குத் தப்பவில்லை.

கொஞ்ச நேரத்தில் திரும்ப வந்த அமராவதி, போட்டோவை அவனிடம் கொடுத்து விட்டு, "என்ன, கங்கா? ஏன் ஒரு மாதிரி ஆயிட்டே?" என்றாள்.

"....பவித்ராவுக்கு ஏதாவது ஆகி இருக்குமோன்னு இப்பல்லாம் அடிக்கடி சந்தேகம் வருது."

அமராவதியின் கண்கள் நொடிக்குள் நிறைந்தன. "உன் வாயால அப்படியெல்லாம் சொல்லாதே, கங்கா."

"கூடிய சீக்கிரம் சுதந்திரம் வந்துடும். அப்ப எல்லாக் கைதிகளையும் விடுவிப்பா. நம்ம பவித்ராவும் அப்ப விடுதலை ஆயிடுவா" என்றாள் அஞ்சனா.

கங்கா விடைபெற்றான்.

சென்னைக் கண்டன ஊர்வலத்தில் கலந்து கொண்ட கங்காவும் ரமணியும் கைது செய்யப்பட்டார்கள். வேலூர்ச் சிறைச் சாலைக்குக் கொண்டு செல்லப்பட்டார்கள்.

(தொடரும்)



**"அங்க என்ன பெரிய கூட்டமா இருக்கு...?"**

**"மந்திரி பையன் ஃபெயிலாயிட்டானாம். பாஸ் போடச் சொல்லிப் போராட்டம் நடத்தறாங்க!"**

**- எஸ். கண்ணன்**

"என் மாப்பிள்ளை ரொம்ப தங்கமானவர்..."

"எப்படிச் சொல்றீங்க...?"

"வரதட்சிணை இல்லாம என் இரண்டாவது பொண்ணையும் கல்யாணம் பண்ணிக்கிடட்டுமான்னு கேட்கிறார்!"

- எஸ். எஸ். பூங்கதிர்



# அபிராமியின் டெபாசிட் சேகரிப்பு விழா

## 14.04.95 முதல் 14.05.95 வரை

### வைப்பு நிதி திட்டம்

| உங்கள் முதலீடு ரூ. 5000/- | |
|---|---|
| காலம் | வட்டி விகிதம் |
| 46 நாட்கள் | 15% |
| 91 நாட்கள் | 18% |
| 6 மாதங்கள் | 21% |
| 1 வருடம் | 24% |

### மறு முதலீட்டுத் திட்டம்

தொகை : ரூ. 1000/- காலம் 1 வருடம்

| 1000/- த்தின் பெருக்கம் | | |
|---|---|---|
| 12 MONTHS | Rs. 1270/- | 27% |
| 24 MONTHS | Rs. 1610/- | 30.5% |
| 36 MONTHS | Rs. 2050/- | 35% |
| 48 MONTHS | Rs. 2600/- | 40% |
| 60 MONTHS | Rs. 3305/- | 46% |

### (மாதம் ரூ. 100 வீதம்) தொடர் வைப்பு நிதி திட்டம்

| காலம் | முதிர்வு தொகை | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|---|
| 12 MONTHS | Rs. 1357/- | 48 MONTHS | Rs. 7259/- |
| 24 MONTHS | Rs. 3011/- | 60 MONTHS | Rs. 9977/- |
| 36 MONTHS | Rs. 4974/- | | |

### அஷ்டலெஷ்மி டெபாசிட் திட்டம்

**ரூ. 3000/- = ரூ. 108190/- 15வருடங்கள்**

### பணத்திற்கு உத்திரவாதம் எப்படி?

- ★ 20 ஆண்டு கால தேக்கு மரத் திட்டத்தின் மூலம் பல ஆயிரக்கணக்கான உறுப்பினர்களைப் பெற்றுள்ளோம்.
- ★ பல நூற்றுக்கணக்கான நிலங்களை பக்க பலமாக கொண்டுள்ளது.
- ★ நன்னீர் இறால் வளர்ப்பு திட்டத்தில் முன்னோடியாக திகழ்கிறது
- ★ வீட்டுமனை மற்றும் அபார்ட்மெண்ட் கட்டி தருகிறோம்.
- ★ முன்தேதியிட்ட காசோலை வழங்குகிறோம்.

★ 14.05.95 வரை 3% ஊக்கத்தொகை தருகிறோம்

★ பென்ஷனர் மற்றும் விதவைகளுக்கு 1% அதிக வ்ட்டி வழங்கப்படும்.

## அபிராமி HIGH இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

(இது ஒரு அபிராமி குருப் நிறுவனத்தின் அங்கம்)

| பதிவு அலுவலகம் : | கிளை அலுவலகம் : | கிளை அலுவலகம் : | கிளை அலுவலகம் : |
|---|---|---|---|
| சித்ரா காம்ப்ளெக்ஸ்,<br>சத்திரம் பேருந்து<br>நிலையம் அருகில்,<br>திருச்சி - 2.<br>போன்: 31467 | 49/21, பிருந்தாவன் தெரு,<br>முருகன் காம்ப்ளெக்ஸ்,<br>மேற்கு மாம்பலம்,<br>சென்னை - 33<br>போன்: 4840258 | சின்னையா<br>காம்ப்ளெக்ஸ்,<br>ஐந்து ரோடு,<br>கௌரி தியேட்டர்<br>அருகில்,<br>சேலம் - 636 004. | D-6, K.L.R. பில்டிங்,<br>207, சாஸ்திரி ரோடு,<br>ராம் நகர்,<br>கோயம்புத்தூர்.<br>போன்: 230345 PP |

# நினைவலைகள்

**TRIFLES MAKE PERFECTION. BUT PERFECTION ITSELF IS NO TRIFLE.**
**— MICHELANGELO**

ஒரு அன்பர் கடிதம் எழுதியிருந்தார். "நினைவலைகளில் நிறைகளைப் பற்றி மட்டுமே குறிப்பிடுகிறீர்களே! குறைகளையும் குறிப்பிட்டால்தானே நினைவலைகள் நிறைவுபெறும்" என்று.

அன்பரே!

கடந்த கால நினைவுகள் எனும்போது சூரியனையும், கடலையும், பூக்களையும், அந்தக் காலத்து சென்னை டிராம்களையும் பற்றி மட்டுமே நினைவுகூர நான் ஒரு கவிஞன் இல்லை; நடந்து வந்த வாழ்க்கையிலே நம்மை பாதிக்கின்ற எந்த நிகழ்ச்சியுமே ஒரு தனி மனிதனோடு சம்பந்தப்பட்டிருப்பதுதான். அந்த வகையில் நடந்தவற்றை எழுதும்போதே controversyகள் கிளம்புகின்ற இந்நாட்களில், எனது தனி மனித வாழ்க்கையில் நான் கண்டு, அனுபவித்து, கேட்டறிந்த, நான் பாதிப்படைந்த நிறைகளைப் பற்றிக் கூறுவதில் சமுதாயப் பலன் இருப்பதாக நான் உணர்கிறேன்.

நாமெல்லோரும் மகாத்மாக்கள் அல்ல. நூற்றுக்கு நூறு ராம பிரான்கள் அல்ல. தனி மனிதப் பண்புகளில் ஆங்காங்கே குறைகள் இருக்கத்தான் செய்யும். அவைகளைப்பற்றி குறிப்பிட வேண்டிய அவசியம் எனக்கில்லை; அது என்னுடைய வேலையுமல்ல!

நான் சந்தித்த நல்ல சிந்தனைகள், நல்ல செயல்பாடுகள், நல்ல கலைஞர்கள், சிறந்த சாதனையாளர்கள், இப்படிப்பட்ட சாதனையாளர்களிடமுள்ள நற்பண்புகள் மட்டுமே இளைஞர்கள் சமுதாயத்திற்கு நல்ல முன்னுதாரணமாகவும், பயனுள்ளவையாகவும் அமையும் என்கிற எண்ணத்தில்தான் இந்தக் கட்டுரைத் தொடரை எழுதிக் கொண்டிருக்கிறேன்.

ஒரு film clipping பாருங்கள்:

படம்: நூற்றுக்கு நூறு

நாகேஷ் ஒரு காட்சியில் ஒரு வெள்ளைக் காகிதத்தை எடுத்து வந்து அதை சுவரில் வைத்துக் காட்டி அதன் நடுவிலே பேனாவினால் ஒரு சின்ன புள்ளியை வைத்து, இது என்னவென்று நாகேஷ் கேட்க, 'அது ஒரு கரும்புள்ளி' என்று லட்சுமி சொல்ல நாகேஷ் உடனே,

"இந்த சின்னக் கரும்புள்ளிதான் உன் கண்களுக்குப் புலப்பட்டிருக்கிறதே தவிர அதைச் சுற்றியிருக்கிற மிகப் பெரிய வெண்மைப் பிரதேசம் உன் கண்களுக்குத் தெரியவில்லை பார்த்தாயா! ஆகவே உன் கண்களிலேதான் கோளாறு இருக்கிறது" என்று சொல்வார்.

எங்கோ எப்பொழுதோ படித்திருந்த ஒரு சின்னத் தகவலை இந்தக் காட்சியிலே நான் பயன்படுத்தியிருந்தேன்.

இந்தக் காட்சி திரை அரங்கத்திலே அபரிமிதமான கைதட்டலைப் பெறுவது வழக்கம்.

கேட்டறிந்த நல்ல சிந்தனைகளை நாம் மட்டுமே சொந்தமாக்கிக் கொண்டுவிடக் கூடாது. அதை நாட்டுடைமையாக்க வேண்டும்; பொது உடைமையாக்கி விட வேண்டும்.

நிற்க:

எனது 'அக்னி சாட்சி' படத்தில் ஒரு காட்சி: அரவிந்தன் என்கிற அந்த நாட்டியக் கலைஞனைப் பாராட்ட வரும் நடிகர் கமல்ஹாசன் "நாங்களெல்லாம் தான் 'சகல கலா வல்லவர்கள்'னு நினைச்சுகிட்டிருக்கோம். ஆனால் இவர் ஒரு 'சைலண்ட் சகல கலா வல்லவர்'" என்று குறிப்பிடுவார்.

இந்த 'சைலண்ட் சகல கலா வல்லவர்' என்பது அந்த அரவிந்தனுக்கு மட்டுமல்ல; அந்தப் பாத்திரத்தை ஏற்று நடித்த சிவகுமாருக்கும் நூறு சதவிகிதம் பொருந்தும் என்பதாலேயே அந்தக் காட்சியில் இந்த வசனத்தை கமல் மூலம் பேச வைத்திருந்தேன்.

நிலைத்து நிற்க வேண்டுமென்று எண்ணுகின்ற நடிகர்கள், தொழில் ரீதியாகத் தங்களை எப்படி படிப்படியாக வளர்த்துக் கொள்ள வேண்டும், வளர்ந்து விட்ட பிறகு எப்படியெல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்பதையெல்லாம் யோசித்துப் பார்க்கும் போது 'பளிச்' சென்று என் கவனத்திற்கு வருகின்றவர் நண்பர் சிவகுமார் அவர்கள்தாம்.

சிவகுமாரைப் பற்றி இன்னமும் ஒரே வாக்கியத்தில்

சொன்னால், every inch a gentleman என்று சொல்வது மாதிரி, சிவகுமார் every inch a perfect professional.

Michelangelo சொன்னது மாதிரி அப்படிப்பட்ட ஒரு perfection ஐ அடைவது எளிதான காரியமல்ல.

இதை விளக்கிக் கூற வேண்டுமெனில், 'எடுத்துக் கொண்ட தமது தொழிலை அவர் தெய்வமாக மதிப்பவர்' என்று சொன்னால் அது சாதாரணம். 'தாம் செய்யும் தொழிலை மாதா, பிதா, குரு, தெய்வமாகக் கொண்டவர் அவர்' என்று தான் சொல்ல வேண்டும்.

தொழில் சம்பந்தப்பட்ட எந்தக் காரியத்தையும் நேர்மையாக, நேர்த்தியாக, அழகாக, செம்மையாக, துப்புரவாக, விரைவாகச் செய்து முடிப்பதில் மிகுந்த அக்கறை செலுத்துபவர்.

Hundred percent perfectionist.

**கா**ட்சிகளில் பேச வேண்டிய வசனங்களிலிருந்து, காட்சிக்குத் தகுந்த மாதிரி அணிய வேண்டிய உடை விஷயங்கள் வரை அவர் கொள்கின்ற பிரத்தியேகக் கவனம், இயக்குனருக்கு உதவியாக மற்ற எல்லா விஷயங்களிலும் அவர் செலுத்துகின்ற தன்னலமற்ற அக்கறை, குறித்த நேரத்தில் படப்பிடிப்புக்கு வருவது இவைகளனைத்தும் அவரை மற்றவர்களிடமிருந்து தனித்து நிற்கச் செய்கின்றன.

ஆகவே ஒரு நடிகர் எப்படி இருக்க வேண்டுமென்று, மற்றவர்களுக்கு முன்னுதாரணமாகத் திகழத் தேவைப்படுகின்ற அத்தனை குணாதிசயங்களும் நிரம்பப் பெற்றவர் என்கிற அர்த்தத்தில்தான் சிவகுமாரை perfect professional என்று சொன்னேன்.

இந்த விஷயத்தில் கமல் கூட நூறு சதவிகிதம் perfect professional என்று சொல்ல மாட்டேன். நடிப்பிலே கமல் ஒரு சிகரம் என்றாலும் நடிப்பைத் தவிர மற்ற ஓரிரு விஷயங்களில் கமல் சற்று மாற்றுக் குறைவுதான் என்று நான் சொன்னால் அதைக் கமல் கூட நிச்சயம் ஒப்புக் கொள்வார்.

"நடிகனாக வேண்டுமென்று கனவு காண்பவர்களும், நடிகனாக நிலைக்க வேண்டுமென்று விரும்புபவர்களும், நடிப்பு கற்றுக் கொள்ளப் பிரியப்படுபவர்களும், நடிப்புக் கல்லூரியைத் தேடிப் போக வேண்டிய அவசியம் கூட இல்லை; தமது தொழிலில் தீவிரமாகத் தம்மை ஈடுபடுத்திக் கொள்கிற சிவகுமாரை ஒரு மாத காலம் அவருடன் கூடவே இருந்து கவனித்தாலே போதும்" என்று ஒரு முறை மேடையிலே அவரைப் பற்றி பேசியிருக்கிறேன்.



அவரைப் பார்த்து கற்றுக் கொள்ளும் போது அவர் என்னென்ன செய்கிறார் என்பதை மட்டுமல்ல; என்னவெல்லாம் அவர் செய்வதில்லை என்பதையும் அவரிடமிருந்து கற்றுக் கொள்ள முடியும். இப்படித் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்கின்ற ஒரு கலைஞனாக இருப்பதால்தான் சிவகுமார் திரையுலகில் ஆணிவேரிட்டு கடந்த 30 ஆண்டுகாலமாக இன்னும் பவனி வந்து கொண்டிருக்கிறார்.

**ஒ**ன்பது மணிவரை நடைபெறும் படப்பிடிப்பில் அவருடைய வேலை ஏழு மணிக்கே முடிந்து விடுகிறதென்று வைத்துக் கொள்வோம். நீங்கள் வீட்டிற்குப் போகலாம் என்று சொன்னாலும் அவர் வீட்டிற்குச் செல்லமாட்டார். "ஒன்பது மணிக்கு முன்னால் போனால் வீட்டில்

என்மனைவி சோறு போட மாட்டாள்'' என்று விளையாட்டாகச் சொல்வார்.

தமது 'மேக்கப்'பைக் கலைத்துவிட்டுப் படப்பிடிப்பு முடிகிறவரை, அங்கேயே இருந்து சக நடிக நடிகையருக்கு என்னென்ன 'ஷாட்'டுகள் எடுக்கப்படுகின்றன என்பதை யெல்லாம் தள்ளி நின்று ஒரு மாணவனைப் போல் கூர்ந்து கவனிப்பதைப் பல நேரங் களிலே நான் பார்த்திருக்கிறேன்.

இன்னமும் அவர் தம்மை ஒரு மாணவ னாகவே கருதுகிறார் என்பதுதான் அவ ருடைய strong point.

சினிமா என்பது மிகப் பெரிய சாதனம். யாருமே அதைக் கரைத்துக் குடித்து விட்ட தாகவோ அதில் கரை கண்டு விட்டதாகவோ நினைத்துக் கொள்ள முடியாது. இதை அவர் நன்கு புரிந்து வைத்திருக்கிறார்.

குறிப்பிட்ட நேரத்தில் படப்பிடிப்பிற்கு வருவதில் சிவாஜி அவர்களுக்கு அடுத்தபடி யாக சிவகுமாரைத்தான் சொல்ல வேண் டும்.

ஒன்பது மணி படப்பிடிப்புக்கு நான் எட்டு ஐம்பதுக்குப்போனால் கூட சிவகுமார் எட்டே முக்காலுக்கே அங்கே வந்திருப்பார். மறுநாள் நான் எட்டு நாற்பதுக்கே சென் றடைந்தால் அவர் எட்டு முப்பதுக்கே 'மேக் கப்'புடன் வந்து விட்டார் என்கிற செய்தி கிடைக்கும்.

அவருடன் நான் பணி புரிந்த அத்தனை படங்களிலும் ஒரு நாள் கூட என்னால் அவரை ஜெயிக்க முடியவில்லை என்பதில் எனக்குச் சந்தோஷமே!

சில நேரங்களில் அவர் மேடையில் பேசும் போது 'என்னய்யா ஞாபகச் சக்தி இந்த ஆளுக்கு?' என்று நான் ஆச்சர்யப் பட்டுப் போவேன்.

23 ஆண்டுகளுக்கு முன்பு வந்த எனது அரங்கேற்றம் திரைப்படத்தில் அவர் நடித்த போது சொன்ன வசனங்களை — அவர் சொன்ன வசனங்கள் மட்டுமல்ல, பிரமீளா பேசும் வசனங்களையும் சேர்த்துத்தான் — அதே ஏற்ற இறக்கத்தோடு அப்படியே அந்த திரைப்படக் காட்சியை மனக்கண்முன் கொண்டு வந்து நிறுத்துவதில் மாமன்னன். நான் கூடச் சொல்வேன்: "உங்கள் டி.வி. பேட்டிகளில் film clippings கூட போட வேண் டாம். நீங்கள் அவற்றைப் பற்றி விளக்கும் போதே முழுகாட்சியையும் மனத்திரையில் ஓடச் செய்து விடுவீர்கள்'' என்று.

'நடிப்பிற்கு இலக்கணமும், அகராதியும் சிவாஜி என்றால் ஒரு நடிகனுக்கு இலக்கண மும் அகராதியும் சிவகுமார்' என்று சொல்வ தில் இருகருத்துக்களுக்கிடமில்லை.

நீங்கள் பார்த்திருக்கலாம். அவரைப் பற்றி ஒரு கிசுகிசு கூட எந்தப் பத்திரிகை யிலும் வந்திருப்பதாகவோ பேசப் பட்டதா கவோ சரித்திரமேயில்லை.

'கிசுகிசு'க்களுக்கு ஒரு பாரம்பர்யம் உண்டு. அவற்றில் 100க்கு 95 சதவிகித விஷயங் களில் உண்மை இருப்பதில்லை. ஆனால் அந்த மீதி 5 சதவிகித விஷயங்கள் உண்மை யாக நிகழ்ந்து விடுவதனால் பத்திரிகை கிசுகிசுகளுக்குச் சில சமயங்களில் ஒட்டு மொத்தமாக நம்பகத்தன்மை ஏற்பட்டு விடு கிறது. வாசகர்களும் அப்படியே நம்பி விடு கிறார்கள்.

Some people believe in anything if it is whispered to them.

'எப்படி நீங்கள் உடலை எப்பொழுதும் trim ஆக வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?' என்று சிவகுமாரை சமீபத்தில் நான் கேட் டேன்.

" Take break fast like a king;
Lunch like a prince;
Supper like a pauper."

மேற்சொன்ன quotationனுத்தான் அவர் சொன்ன பதிலும் எதிரொலித்தது.

(தொடரும்)



ஓம் முருகா

# திருப்போரூர் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சுவாமிகள் மகா குரு பூஜை விழா

## திருப்போரூர்

ஸ்ரீலஸ்ரீ சிதம்பரசுவாமிகளின் 336வது ஆண்டு குருபூஜைப் பெருவிழா 11.6.1995 யுவ ஆண்டு வைகாசித் திங்கள் 28ம் நாள் ஞாயிற்றுக் கிழமை ஸ்ரீலஸ்ரீ சிதம்பரசுவாமிகள் மடாலய சந்நிதியில் மகாபிஷேகாதி திவ்ய அலங்கார சோடசோபசார தூபதீப ஆராதனைகளுடன் விமரிசையாக நடைபெற உள்ளது. மறுநாள் வேம்படி விநாயகருக்கு 1008 திருப்பாவாடை வைபவமும் நடைபெற உள்ளது. அன்பர்கள் வந்திருந்து வழிபாட்டைக் கண்டு தரிசித்து இறை அருளைப் பெற விழையும்,

வெ.சுந்தரராஜன் எம்.ஏ.,
நிர்வாக அதிகாரி

அருள்மிகு சிதம்பர சிவஞான சுவாமிகள்
ஆதீன பரம்பரை தர்மகர்த்தர்



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1995

## முதல் பரிசு ரூ. 1,500;
## இரண்டாவது பரிசு ரூ. 1,000;
## மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 500 வீதம்) ரூ. 1,000.

**ஆக மொத்தம் ரூ. 3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.**

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசிலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : ஜூன் 15.**

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 6 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

# மேக்சிமா - குரூப் நிறுவனங்கள்

உங்கள் முதலிட்டிற்கு

## 25%

வட்டி
வழங்குகிறது

**MAXIMA**

மேக்சிமா பெனிபிட் பண்ட் லிமிடெட்
மேக்சிமா கிரெடிட் லிங்க்ஸ் (பி) லிமிடெட்
மேக்சிமா சிட்ஸ் மெட்ராஸ் (பி) லிமிடெட்
மேக்சிமா இன்வெஸ்ட்மெண்ட் & பைனான்ஸ் கம்பெனி

ஒவ்வொரு மாத வட்டிக்கான காசோலை மொத்தமாக முதலீடு செய்யும் பொழுதே வழங்கப்படும்.

## உங்கள் வருங்காலக் கனவுகளை நனவாக்கும் வளமான சேமிப்புத் திட்டங்கள்.

| | | |
|---|---|---|
| பிக்சட் டெபாசிட் | ஒவ்வொரு மாதம், காலாண்டு, அரையாண்டுகளில் வட்டி வழங்கப்படும். | குறைந்தபட்ச முதலீடு ரூ.5,000/- |
| குமுலேட்டிவ் டெபாசிட் | 45.60% P.A அதிக பட்ச வட்டியாக பெறுவீர் | ரூ.5,000/- |
| கோல்டன் டெபாசிட் | முதலீடு 3 வருடங்களில் இருமடங்காகும் | ரூ. 7,500/- |

**மேக்சிமா - உங்கள் முதலீட்டிற்கு முழுப் பாதுகாப்பு அளிக்கக் கூடியது.**

| காலம் | வட்டி |
|---|---|
| 12 மாதங்கள் | 26.80 % |
| 24 மாதங்கள் | 30.40 % |
| 36 மாதங்கள் | 32.66 % |
| 48 மாதங்கள் | 39.67 % |
| 60 மாதங்கள் | 45.60 % |

மேலும் விவரங்களுக்கு
**மேக்சிமா இன்வெஸ்ட்மெண்ட் & பைனான்ஸ் கம்பெனி**
**பதிவு அலுவலகம் :** 1, வேதாந்த தேசிகர் தெரு, லஸ் பஜார் அருகில், மயிலாப்பூர், சென்னை - 600 004. தொலைபேசி : 4941849, Fax : 044-4347655. தந்தி : MAXFIN
**தலைமை அலுவலகம் :** 146, எல்டாம்ஸ் ரோடு, சென்னை - 600 018. தொலைபேசி : 456950 / 458549 / 452559
**கார்ப்பரேட் அலுவலகம் :** 'ஜெயம் பில்டிங்' AA-147, 3வது அவின்யூ அண்ணா நகர், சென்னை - 600 040 தொலைபேசி : 6280468

**கிளை அலுவலகங்கள் : -**

K.R. பில்டிங் 124-A. லேட்டிஸ்பிரிட்ஜ் ரோடு, அடையாறு சென்னை - 600 020 தொ.பே. 415511

'ராஜ ராஜேஸ்வரி டவர்' 567-568, டாக்டர் நஞ்சப்பா ரோடு, காந்திபுரம், கோயம்புத்தூர்-641 018. தொ.பே. 231938

Aparna

***மேக்சிமா - அதிகபட்ச நம்பிக்கைக்குரியது.***

# மற்றும் சில மனிதர்கள்

உமா குமார்

**க**ண்டக்டர் ஏமாற்றி விட்டான். ஐம்பது ரூபாய் கொடுத்து, ஒண்ணு தொண்ணூறு டிக்கெட் வாங்கியது போக, மீதி கொடுத்ததில் ஒரு கிழிசல் இருபது ரூபாய் நோட்டு. அகழ்வாராய்ச்சியில் சிக்கியது மாதிரி நிறம் மாறி, உருக் குலைந்து, ஆங்காங்கே கிழிந்து, சிகரமாக சென்டரில் ஒரு ஸ்டிக்கர் பொட்டு சைஸ் ஓட்டை. அவசரத்தில் கவனிக்காதது பிச காயிற்று. கவனித்து விட்டதால் என் மனைவி ஒரு கண்டனப் பேருரை நடத்தித் தீர்த்து விட்டாள்.

ஒரு காரியத்துக்கு லாயக்கில்லை. பொறுப்பில்லை. துப்பில்லை. இன்னும் பல இல்லைகள்.

ஆகவே முடிவு செய்தேன். எனக்கு எல்லாம் இருக்கிறதை நிரூபிக்க, அந்த செல்லாத நோட்டை எங்காவது 'தள்ளி' விடுவதென்று.

பையை எடுத்துக் கொண்டு மார்க்கெட்டுக்குக் கிளம்பினேன். யார் தலையில் கட்டுவது? கடைக்காரர்களின் முகங்கள் வரிசையாகக் கண்முன் வந்து போக-

அந்தக் கிழவியைத் தேர்ந்தெடுத்தேன். எப்போதும் பரபரப்பான காய்கறி வியாபாரத்திலிருக்கும் எழுபதைத் தாண்டினவள். அவள்தான் சரி.

குறுகுறுப்புடன் நாலைந்து காய்கறிகளை எடைபோட்டு பையில் வாங்கிக் கொண்டு உதறிய படியே நோட்டை மடக்கி நீட்டினேன். பதினெட்டு ரூபாய். மீதி கேட்கிற சமயமா இது? கிழவிக்கு அதுவாவது லாபமாகட்டும்.

நோட்டைக் கொடுத்து விட்டு, விட்டேன் சவாரி! என் அருமை மனைவியே, பார் என் சாமர்த்தியத்தை!



**எ**ன் கொழுப்பு. அடுத்த சில நாட்களில் மீண்டும் அந்தப் பக்கம் எதற்கோ போக, கிழவி பார்த்து விட்டாள்.

"சாரே! ஐயா! இந்தா ராசு, அவரைக் கூப்பிடு..."

கிழவி யாரையோ ஏவ, எனக்கு கிலி பிடித்துக் கொண்டது. கடவுளே, மாட்டிக் கொண்டேனா!

"சார், உங்களைத்தான். அந்த ஆயா கூப்பிடுது பார்!"

பலி ஆடு மாதிரி கிழவி முன் நான் நிறுத்தப்பட,

"என்னசாமி! அன்னிக்கு காய் வாங்கிக்கினு இருந்து ருவா குடுத்தே! பதினெட்டு போக மீதி வாங்கிக்காம பூட்டியே! கூப்பிடறேன், கூப்பிடறேன்- கண்டுக்காம பூட்ட! மறந்துடப் போறனேன்னு தனியா எடுத்து வெச்சேன். இந்தா!" எனக்குத் தலை சுற்றியது! கிழவி பேசிக் கொண்டே போனாள்:

"நேர்மை தான்யா எனக்கு முக்கியம்... ஒரு பைசா அனாவசியமா இன்னொருத்தரோடது வெச்சிக்க மாட்டேன்... ஆனா பாரு, போன வாரம் எவனோ செல்லாத நோட்டு ஒண்ணு தள்ளிட்டுப் பூட்டான். பாக்காம வாங்கிப் போட்டேன். இப்ப என்னா செய்யறது? கலந்து போயிடப் போவுதேன்னு தனியா போட்டு வெச்சிருக்கேன்... மனுசங்களப் புரிஞ்சிக்க முடியலயே சாமி!"

கிழவி பேசிக் கொண்டே போக, எனக்குள் நான் தூள் தூளாகிக் கொண்டிருந்தேன்!

# பவர் கட்டுக்குப் பிரார்த்தனை செய்வோம்

ஜவுளிக் கடைகளிலும் ஜர்தா பீடாக் கடைகளிலும் பானிபூரி, பட்டாணி சுண்டல் விற்கும் பிளாட்பார தகர வண்டிக் கடைகளிலும்... ஏன் நகைக் கடைகளிலும் கூட இருக்கிற கூட்டம்- விளையாட்டு உபகரணங்கள் விற்கிற கடைகளில் கிடையாது!

இத்தனைக்கும் தெரு ஓ டெண்டுல்கர்கள், மாடி வீட்டு ஜன்னல், வேண்டாத முரட்டு மாமாக்களின் மண்டை, மாமிகளின் கொண்டை இன்ன பிறவற்றைப் பதம் பார்ப்பதில் குறைச்சலில்லை. வாயைப் பிளந்துகொண்டு ஸ்டார் டீ.வியில் அழுகுணி ரக்பி ஆட்டங்களை ரசிப்பதில் ஈடுபாடு போய்விடுவதில்லை.

இருப்பினும் "விளையாட்டு ஆர்வம், முன்னத்தனைக்கு இப்போது லேது!" என்கிறார் மவுண்ட் ரோடு மெட்ரோ ஸ்போர்ட்ஸ் நிறுவன மேலாளர் பி.எல். பூரி.

"கிரிக்கெட் மோகம் போயே போச்சு. இரண்டு, மூன்று வருஷங்களாக வியாபாரம் செமை டல்! கேரம் போர்டு, செஸ் போர்டு- காயின் வாங்கிப் போகிறார்கள். ஃபுட்பால், வாலிபால் உள்ளிட்ட வேறெந்த அவுட்-டோர் விளையாட்டுச் சாமான்களும் விற்கிறதே இல்லை" என்று அழாக்குறையாகச் சொல்கிறார் பூரி. (பொறிந்து தள்ளுகிறார் என்றால் பொருத்தமாக இருக்கும் இல்லை?)

என்னவாம் காரணம்?

"வேறென்ன! வாழ்க்கைத்தரம், விலை தான்! முன்பெல்லாம் பையன்கள் சேர்ந்து காசுபோட்டு கிரிக்கெட் பந்து வாங்குவார்கள். இப்போது அதுவும் குறைந்து விட்டது. காரணம் விலை! நல்ல பந்து 50 ரூபாய்க்கு மேல் ஆகிறது. யார் வாங்குகிறார்கள்? தவிர, ஸாட்டிலைட் டீவிக்கள் நம் நேரத்தைச் சாப்பிட்டு விடுகின்றன. விளையாட்டு ஆர்வம் குறைந்து போய் டீ.வி. தாசர்களாகி விட்டோம். போதாக் குறைக்கு கில்லிதாண்டு முதல் கிரிக்கெட் வரை வகை வகையான ஆட்டங்களை உடல் வியர்க்காமல் கம்ப்யூட்டருடனே ஆடி விட முடிகிறது.

"ஆகவே எங்கள் பிழைப்பு, பி.டி. மாஸ்டர்களை நம்பியே இப்போது உள்ளது. ஜூலை வரியிலிருந்து மார்ச் வரை ஷீல்டுகள், மெடல்கள், கப்புகளோடு பள்ளிகளுக்குத் தேவையான சில விளையாட்டுச் சாமான்களும் வாங்குவார்கள். அந்த வகையில் கொஞ்சம் நிம்மதி."

விளையாட்டுச் சாமான்களை விடவும் உடற்பயிற்சி உபகரணங்கள் ஓரளவுக்கு வியாபாரமாவதாகவும் சொல்கிறார்கள்.



• வாங்க ஆளில்லை....

உடல் பருமனைக் குறைக்க வேண்டி இவற்றை வாங்கும் பெண்களால் ஸ்போர்ட்ஸ் கடைக்காரர்களுக்குக் கொஞ்சம் ரிலீஃப்.

''தொப்பை குறைய 'டம்மி ட்ரிம்மர்', 'பாடி ப்யூட்டிஃபுல்' போன்ற உபகரணங்களை வாங்கிப் போகிறார்கள்!''



• பூரி

அம்மணியர் வாழ்க. அப்படியும் ஒரு சிக்கல். வெட்கம் விட்டு, உடம்பு குறைய உபகரணம் தேடி வருபவர்கள் மிகக் குறைவு.

கடைக்காரர்களுக்கோ, வருகிற சொற்ப வாடிக்கையாளர்களை வளைத்துப்போட்டு, கூடுதல் விலையில் தலையில் கட்டி விடுகிற அவசரம், அவசியம். விலையை ஏற்றி விடுவதால் பெரிய லாபமும் இல்லை.

''பிராஃபிட் மார்ஜின் குறைவு'' என்கிறார்கள்.

நிரந்தரமாகக் கரெண்ட் கட் ஆகி, டீ.வி. மோகம் குறைந்தாலொழிய இவர்களுக்கு விடிவு காலம் வராது போலிருக்கிறது!

— துளசி

படங்கள்: யோகா



# ஒரு ஸ்போர்ட்ஸ் நிருபரின் டயரி குறிப்புகள்

'சேப்பாக்கத்தில் அசாருதீன் தர்பார்; ஒரே பந்தில் கபில் விசுவரூபம்' போன்ற தலைப்புகள் சூட்டுவதில் வல்லவர் ப.இளையபெருமாள்; 'தினமணி' நிருபர். கட்டுரைகளிலும் தனி முத்திரை இருக்கும். அவர் அனுபவங்கள்:

●● சென்னை சேப்பாக்கத்தில், பயிற்சியில் பங்கு கொள்ள நம் இந்திய கிரிக்கெட் அணியினர் வந்திருந்தனர். போட்டோகிராஃபருடன் நான் ஸ்டேடியத்துக்குப் போனேன். முற்றிலும் புதிய கோணங்களில் கபில்தேவைப் படம் எடுக்க வேண்டும் என்று புகைப்படக்காரர் சொன்னார். பயிற்சியாளர் சித்தார்த்தா மேற்பார்வையிட கபில்தேவ் பயிற்சிகள் செய்து கொண்டிருந்தார். புகைப்படம் எடுக்கும்போது, கபிலுக்குச் சுத்தமாக விருப்பமே இருக்கவில்லை. "என்னைப் பின் தொடர வேண்டாம்... புகைப்படம் எடுக்காதீர்கள்..." என்றார். புகைப்படக்காரர் விடுவதாயில்லை! கபில் கவிழ்ந்து படுத்தபடி பயிற்சி எடுக்கும்போது, புகைப்படக்காரரும் அவருக்கு நேர் எதிரே படுத்தபடி காமிராவை ஃபோகஸ் பண்ணியதும் கபிலுக்குச் சிரிப்புத் தாங்கவில்லை! குபீரென்று சிரித்து விட்டார். பிறகு எங்களுடன் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு, அன்யூஷுவல் கோணங்களில் தம்மைப் புகைப்படங்கள் எடுக்கப் பெரிதும் உதவினார்.

●● 'பெவிலியனில் ஒரு பேட்டி' என்ற தலைப்பில் எல்லா இந்திய கிரிக்கெட் வீரர்களிடமும் பேட்டி காண, கேள்விகளைத் தொகுத்து மானேஜர் வடேகர் அனுமதியுடன் அவர்களிடம் கொடுத்திருந்தேன். ஒரு வாரம் முழுக்க, காலையிலும் மாலையிலும் அவர்களை விடாமல் பின்தொடர்ந்து, எப்படியோ எல்லாரது பேட்டிகளையும் வாங்கி விட்டேன் – மனோஜ் பிரபாகர் தவிர. காம்ப்ளி தமக்குக் கல்யாணம் நிச்சயமான குஷியான 'மூடில்' இருந்தார். கும்ப்ளே பதில்களையெல்லாம் அவராக, அழகாக எழுதியே கொடுத்தார். அசாரும், டெண்டுல்கரும் பொறுமையாக ஒவ்வொரு கேள்விக்கும் பதில் சொன்னார்கள். ஆனால், காலையில் போனால் 'மாலையில் பார்க்கலாமே?' என்பார்கள். மாலையில் போனால், 'ஒரே களைப்பாக இருக்கிறது' என்பார்கள்! நம் சொந்த விஷயத்தில் – ஒரு ரேஷன் கார்டு வாங்கக் கூட இவ்வளவு கஷ்டப்பட்டிருப்போமா என்று தோன்றி விட்டது! ஆனால் 'பெவிலியனில் ஒரு பேட்டி' வெளியாகத் தொடங்கியதும் அதற்குக் கிடைத்த வரவேற்பு என் அலைச்சலை எல்லாம் மறக்கடித்துவிட்டது!

●● 88 ஸோல் ஒலிம்பிக்ஸில் பென் ஜான்சன் 100 மீட்டர் ஓட்டத்தில் தங்கப் பதக்கம் வென்றார். உலக சாம்பியன் கார்ல் லூயிஸ் இரண்டாவதாகத் தான் வந்தார். ஓகோ என்று புகழ்ந்து பென்ஜான்சனைப் பற்றி வந்த ஏஜென்சி செய்திகளை வைத்துப் பிரமாதமாகக் கட்டுரை எழுதிவிட்டோம். மறுநாள் –

பென்ஜான்சன் போட்டிக்கு முன் போதை மருந்து உட்கொண்டிருந்தார் என்பது நிரூபணமாகி, மெடலை அவரிடமிருந்து வாங்கி, கார்ல் லூயிசிடம் கொடுத்து விட்டார்கள்! மறுநாள், பென்ஜான்சனைப் பற்றிப் புகழ்ந்து எழுதியதை எல்லாம் வாபஸ் பெறுகிற மாதிரி வேறு கட்டுரை எழுத வேண்டி வந்தது.

"என்னய்யா, நேத்து ஓரேயடியா ஓகோன்னு எழுதினீங்க! இன்னிக்கு இப்படி எழுதிட்டீங்களே?" என்று நண்பர்கள் கேட்டபோது, நியாயமாகவே பட்டது. இதுதான் தர்மசங்கடம் என்பது!

-சாருகேசி

# பணம் பண்ணலாம் வாங்க...

## பாவம், சச்தேவா!

லீ ஐயகோகா என்றொரு அமெரிக்கர். உலகின் நம்பர் ஒன் கார் உற்பத்தி நிறுவனமான ஃபோர்ட் நிறுவனத்தின் எம்.டி.யாக வந்திருக்க வேண்டியவர். கடைசி நிமிஷத்தில் 'கம்பெனி பாலிடிக்ஸ்' காரணமாக கல்தா கொடுத்து விட்டார்கள்! ரோசத்துடன் கிரைஸ்லர் நிறுவனத்தில் சேர்ந்தார். கார் உற்பத்தியில் ஃபோர்டை ஓவர் டேக் செய்தது கிரைஸ்லர் நிறுவனம்.

ஐயகோகா மாதிரி வருவேன் என்று வீர சபதத்துடன் புறப்பட்டவர்தான் பவன் சச்தேவா. டெல்லிக்காரரான இவர், இன்று 'பாவம்' சச்தேவாவாகக் கம்பி எண்ணும்படியாகி விட்டது! இத்தனைக்கும் ஐயகோகா மாதிரி வெளியேற்றப்பட்டவரில்லை இவர். எம்.எஸ்.ஷூஸ் (ஈஸ்ட்) லிமிடெட் என்கிற ஷூக்கள் உற்பத்தி மற்றும் ஏற்றுமதி நிறுவனத்தை ரொம்ப வெற்றிகரமாக நடத்தி வந்தார். நான்கு வருடங்களில் ஏற்றுமதி மதிப்பு பதினோரு கோடி ரூபாயிலிருந்து 116 கோடி ரூபாய்க்கு உயர்ந்தது என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!

கடந்த ஆண்டு மட்டும் இவர்கள் பார்த்த லாபம் 24.19 கோடி ரூபாய்.

ஆசை யாரை விட்டது! ஹோட்டல்கள், பருத்தி, பாலியஸ்டர் நூல் உற்பத்தி என்று பல துறைகளில் ஈடுபடும் வெறியுடன் செயல்பட்டார் பவன் சச்தேவா. ஏற்கெனவே செய்து வந்த தொழிலுடன் துளியும் தொடர்பில்லாத இத் துறைகளில் முதலீடு செய்ய எழுநூறு கோடி ரூபாய் தேவைப்பட்டது. எம்.எஸ். ஷூஸின் வெற்றி தந்த செல்வாக்கைப் பயன்படுத்தி அந்தத் தொகையைச் சேகரிக்க முடிவெடுத்தார் சச்தேவா. வட்டியில்லாத டிபெஞ்சர்களைப் பங்கு மார்க்கெட்டில் விட்டார்.

டிபெஞ்சர் என்பது ஃபிக்ஸட் டெபாஸிட்டின் ஒன்றுவிட்ட தம்பி மாதிரி... ஒரு நிறுவனத்தின் டிபஞ்சர்களை நாம் வாங்கினால் முன் நிர்ணயப்படி வட்டி நமக்குக் கிடைக்கும். தவிர, உரிய காலம் சென்ற பிறகு அந்த டிபெஞ்சர்கள் அதே நிறுவனத்தின் ஷேர்களாக மாற்றப்படும். நாம் அந்நிறுவன பங்குதாரர் ஆகி லாபத்தில் பங்கு (dividend) அனுபவிக்க ஆரம்பிப்போம்.

சச்தேவா வெளியிட்ட டிபெஞ்சர்களுக்கு வட்டி கிடையாது! (zero interest). ஆனால் சுமார் பதினெட்டு மாதங்கள் கழித்து டிபெஞ்சர்கள் ஷேர்களாக மாற்றப்படும் (fully convertible) என்று அறிவித்தார்கள்.

'முதல் ஒன்றரை வருஷங்களுக்கு, நாம் முதலீடு செய்யும் தொகைக்குச் சல்லிக்காசு கூட லாபம் இருக்காது. எனினும் பிற்காலத்தில் இந்த ஷேர்கள் நல்ல விலைக்குப் போகும்' என்கிற எதிர்பார்ப்பில் ஏராளமானவர்கள் இந்த நிறுவனத்தில் முதலீடு செய்தார்கள்.

கோடையில் தமிழக வெப்பநிலை மாதிரி எம்.எஸ்.ஷூஸ் நிறுவன ஷேர்களின் விலை ஏற ஆரம்பித்தது. பத்து ரூபாய் ஷேரின் விலை ஐந்நூறு ரூபாய் வரை போனது!

இதை நியாயப்படுத்த எந்தவிதமான ஆதாரமோ நடவடிக்கையோ எம்.எஸ்.ஷூஸ் நிறுவனத்தில் இல்லை. இருப்பினும் இவை மதிப்பு மிக்க ஷேர்கள் என்று நம்பி மக்கள் வாங்கிக் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று ஒரு நாள், பொருளாதார நாளிதழ் ஒன்று அதிர்ச்சி ரிப்போர்ட் வெளியிட்டது: எம்.எஸ். ஷூஸ் அதிபர் பவன் சச்தேவா, தமது நிறுவன ஷேர்களை அதிக விலை கொடுத்து வாங்க சில புரோக்கர்களை 'ஏற்பாடு' செய்திருந்தார். இவர்கள் குதிரை விலை, யானை விலை கொடுத்து மொத்த மொத்தமாக எம்.எஸ்.ஷூஸ் ஷேர்களை வாங்க, அவற்றுக்குச் செயற்கையாக 'டிமாண்ட்' அதிகரிக்க, ஒரு மாயை ஷேர் மார்க்கெட்டை முடிக் கொண்டிருந்தது என்பது வெளிப்பட்டது.

ஹர்ஷத் மேத்தா விவகாரம் பெரிதாக வெடித்த பிறகு SEBI என்று ஓர் அமைப்பை அரசாங்கம் ஏற்படுத்தியது. Securities and Exchange Board of India என்ற அந்த அமைப்புதான் ஷேர்மார்க்

# வி. கோபாலன்

கெட்டின் காவல்காரன். ஷேர் விலை நிர்ணயமும் வியாபாரமும் SEBI விதிகளை மீறாமல் நடக்க வேண்டும். ஆனால் எம். எஸ். ஷுஒஸ் விஷயத்தில் SEBI விதிகள் காற்றில் பறக்க விடப்பட்டிருந்தன. இது வெளியான பிறகு, சம்பந்தப்பட்ட SEBI அதிகாரிகள் மீதும் குற்றப் பத்திரிகை தாக்கல் ஆகியுள்ளது.

இப்போது எம்.எஸ்.ஷுஒஸ் நிறுவனம் முடக்கப்பட்டுக் கிடக்கிறது. அதில் பணம் போட்ட முதலீட்டாளர்கள் – முக்கியமாக நம் மிடில் கிளாஸ் தோழர்கள் – மகாநதி கமல் கதையாகக் கையைப் பிசைகிறார்கள். பவன் சச்தேவா, தமது விஸ்தரிப்புத் திட்டத்துக்கு, தாம் எதிர்பார்த்த அளவு பணமும் திரட்ட முடியவில்லை. அது மட்டுமல்ல.. இதே சமயத்தில் பங்குகள் கோரி மார்க்கெட்டுக்கு வந்த வேறு பல நிறுவனங்களும் மார்க்கெட் சரிவினால் பாதிக்கப்பட்டு அடி வாங்கியுள்ளன.



மக்கள் ஏமாந்து போனதற்கு ஒரு முக்கியமான காரணம் – விளம்பரம்! ஏறத்தாழ ஒரு சினிமா ஹீரோவைப் போல் விளம்பரப்படுத்திக் கொண்டார் பவன் சச்தேவா. நம் உடம்பில் ஓடும் ரசிகர் மன்ற ரத்தம் சும்மாயிருக்குமா? சறுக்க வைத்து விட்டது!

''இதனால் அறியப்படுவது யாதெனில், விளம்பரங்களைக் கண்டு ஏமாற வேண்டாம்'' என்று மட்டுமே சொல்லி நகர்ந்தால் சிகாமணி சும்மா விடமாட்டேன் என்கிறார்.

''விளம்பரங்களை எப்படி அய்யா நாங்கள் பகுத்து அறிவது?'' என்று சட்டசபை மாதிரி துணைக் கேள்வி கேட்கிறார்.

எத்தனையோ விளம்பரங்களை டி.வி.யில் பார்க்கிறோம். சாக்லேட் சாப்பிட்ட உடனே டான்ஸ் ஸ்டெப் ஒழுங்காக வந்து விடுகிறது; காப்பி குடித்த வுடனே மோட்டார் சைக்கிள் புஷ்பக விமானம் மாதிரி பறக்கிறது. பவுடரைப் பூசிக் கொண்டு இன்டர்வியூவுக்குப் போனால் வேலை கிடைத்து விடுகிறது!... இதையெல்லாம் நாம் ரசித்துப் பார்த்தாலும் முழுசாக நம்புவதில்லை. நம்ப விடாமல் ஓர் எச்சரிக்கை உணர்வு மூளைக்கு 'ரெட் சிக்னல்' காட்டுகிறது.

ஆனால், பணம், மேலும் பணம், மேலும் மேலும் பணம் என்னும் ஆசை வந்து விட்டால், அது எச்சரிக்கை உணர்வுக்கு 'கிரீன் சிக்னல்' காட்டி விரட்டி விடுகிறது.

இதை நடக்க விடாமல் தடுப்பது நம் கையில்தானிருக்கிறது.

ஃபிக்ஸட் டெபாசிட்டுகளுக்கு ரிசர்வ் வங்கி அங்கீகரித்துள்ள உயர்ந்தபட்ச வட்டி 14 சதவிகிதம். இதைப் போல இரண்டு அல்லது இரண்டரை மடங்குகூட தருவதாகச் சில நிதி நிறுவனங்கள் விளம்பரம் செய்கின்றன. இவை ரிசர்வ் வங்கியின் கட்டுப்பாட்டில் இல்லை. அரசு எந்தவித நடவடிக்கையும் எடுக்க முடியாத சட்ட சிடுக்கு.

ஆகவே ஃபிக்ஸட் டெபாஸிட் நிறுவனங்களைத் தேர்ந்தெடுக்கும்போதும் சரி, ஷேர்கள் வாங்கும் போதும் சரி, நாம் ஒருமுறைக்குப் பலமுறை யோசித்து, விசாரித்து வாங்குவது நல்லது. அந்த நிறுவனங்களில் யார் யார் டைரக்டர்களாக இருக்கிறார்கள்? ஷேர் விநியோகமெனில் SEBI விதிகள்படி என்னென்ன 'ரிஸ்க்'கள் பட்டியலிடப்பட்டுள்ளன என்றெல்லாம் துருவ வேண்டும்.

''ஏறத்தாழ பெண்ணுக்கு மாப்பிள்ளை பார்க்கிற மாதிரி'ன்னு சொல்லுங்க'' என்கிறார் சிகாமணி.

..அவர் சொன்னால் சரியாகத்தானே இருக்கும்!

(தொடரும்)

# ஜெயாவின் சீற்றம் தணித்திட ராவுக்கு ஒரு யோசனை?



• சதியா? சரியா?



• அடுத்த முதல்வர்?



• உறவு முறிந்தது!



• கிரிக்கெட்டா ஆடுகிறார்?



• நிரந்தர கவனம்



• தற்போதைய சாணக்கியன்?

● **எஸ். நாகராஜன், மேலப்பாதி.**

*? ஜெ மீது வழக்குத் தொடர கவர்னர் அனுமதி அளித்தது திட்டமிட்ட சதியா! சட்டப்படி சரியா!*

! கவர்னர் அனுமதி அளித்தது சட்டப்படி சரி; அவர் மீது சொல்லாலும் கல்லாலும் முட்டையாலும் 'கேரோ'வாலும் கூடுமானால் குண்டாலும் அதிமுகவினர் தாக்குதல் நடத்துவது திட்டமிட்ட சதி.

● **தென்றல் பிரியன், மேலூர்.**

*? வை. கோ. அடுத்த முதல்வரா?*

! இருந்தாலும் உங்களுக்கு சென்ஸ் ஆஃப் ஹியூமர் ரொம்ப ஜாஸ்தி சார்!

● **சூர்யநிலா, சேலம் - 2.**

*? "பிரபுவுடன் என் உறவு முறிந்துவிட்டது" என்கிறாரே, குஷ்பு?*

! சினிமாவாகிவிட்ட மற்றொரு நடிகையின் வாழ்க்கை.

● **பி. பார்த்தன், குழித்தலை.**

*? "செஞ்சுரி அடித்தும் நாட் அவுட் பேட்ஸ்மென் ஜெயலலிதா" என்று குறிப்பிடுகிறாரே, ஆர்.எம்.வீ!*

! கிரிக்கெட் என்ற சொல்லுக்கே நேர்மை, பெருந்தன்மை என்பதாகப் பொருள் உண்டு. இங்கோ ஒரு பந்தில் அம்பயர் (நீதிமன்றம்) அவுட் கொடுத்தாகிவிட்டது. இன்னொரு பந்தில் லெக் அம்பயர் (ஆளுனர்) ஒற்றை விரலை உயர்த்தியாகிவிட்டது. தேர்ட் அம்பயர் (பத்திரிகைகள்) 'ரீப்ளே' பார்த்து சிவப்பு விளக்கை எரியச் செய்தாகிவிட்டது. இவ்வளவுக்குப் [illegible]ரும் 'பெவிலியன் திரும்ப மாட்டேன்' என்று பிடிவாதம் பண்ணுகிறவர் கிரிக்கெட்டா ஆடுகிறார்?

● **மு. கிருஷ்ணா, லால்குடி.**

*? "இளநீரை பாலிதீன் பைகளில் வழங்க வேண்டும்" என்ற ஜெ. யோசனை எதைக் காட்டுகிறது?*

! இதைவிடவும் முட்டாள்தனமான யோசனையை யாரும் வழங்க முடியாது என்பதைத்தான்! இயற்கையே இளநீரை அற்புதமாக, சுகாதாரமாக, 'பாக்' பண்ணிக் கொடுக்கும்போது அதை அசுத்தமாக்கி விநியோகிக்க அவசியம் என்ன வந்தது?

● **ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.**

*? "சத்துணவு ஊழியர்களை நிரந்தரமாக்க இயலாது" என்று அமைச்சர் இந்திரகுமாரி கூறியிருக்கிறாரே?*

! அவருக்கு ஜெயலலிதாவை நிரந்தர முதல்வர் ஆக்குவதிலேதான் நிரந்தர கவனம்!

● **எம். இம்து ரஹ்மான், மதுரை.**

*? தற்போதைய அரசியல் சாணக்கியன் யார்?*

! சு. சுவாமிதான். அவர் மட்டும் காய்களைத் தொடர்ந்து ஒழுங்காக நகர்த்தினால் தமிழகத்துக்கு நல்ல காலம் பிறக்கலாம்.

● **கே. சஞ்சீவி பாரதி, அவ்வையார்பாளையம்.**

*? சி.பி.ஐ. மீதே 'ஜெ' குற்றம் சாட்டுகிறாரே?*

! 'சி.பி.ஐ. ஒன்றும் 'பர்ஃபெக்ட்' இல்லை; அவர்களும் தப்புப் பண்ணுகிறார்கள்' என்கிறார். நாமும் அதைத்தான் சொல்கிறோம். ''ஜெ' ஒன்றும் தெய்வம் அல்ல; தெரிந்தும் தெரியாமலும் பல குற்றங்களைப் புரிந்திருக்கிறார்' என்று!

● **சுந்தர் அழகேசன், திருச்சுழி.**

*? "வில்லி ரோல் பண்ணலாமா என்று ரொம்ப தானாக*

ஆசை" என்கிறாரே, மனோரமா?

! நமக்குக் கற்பனை செய்து பார்ப்பது கஷ்டம்; ஆனால் அவர் அந்த ரோலை எடுத்துக் கொண்டால் அதிலும் அசத்திவிடும் ஆற்றல் மிக்கவர் தான்!

● **என். சண்முகம், திருவண்ணாமலை.**

? ***"யார் இந்த டாக்டர் சுவாமி?" என்று என்.டி.ஆர். கூடக் கேட்டிருக்கிறாரே?***

! இப்படித்தான் 'ஜெ'யும் கேட்டார், தொடக்கத்தில்!

● **ஏ. செந்தில்குமார், சூலூர். □**

? ***சென்னா ரெட்டி மீது தேவே கௌடா பாய்வதன் காரணம் தம் முதல்வர் மீது உள்ள மரியாதையாலா?***

! இல்லை. என்.டி.ஆர். பாய்வதற்கும் அது காரணமில்லை. முதல்வர்கள் இருவருமே இன்று ஜெக்கு நேர்ந்தது தங்களுக்கும் நேரக் கூடாதே என்ற அச்சத்தில், தற்காப்பு உணர்வில் பேசுகிறார்கள். அவர்கள் குற்றம் புரியாதவரை அஞ்சத் தேவையில்லை. ஜெ. மீது எத்தனையோ குற்றச்சாட்டுகள் அடுக்கப்பட்டிருந்தும் நீண்ட காலம் நன்கு ஆராய்ந்து இரண்டில் மட்டுமே ஆதாரம் இருப்பதாகக் கருதி சென்னா ரெட்டி நடந்து கொண்டிருப்பதைக் கவனிக்க வேண்டும். ஆளுநர்கள் அள்ளித் தெளித்த அவசரக் கோலமாகச் செயலாற்றி மக்கள் ஆதரவு பெற்ற தலைவர்களை இழிவுபடுத்தி, பழிச் சொல்லுக்கு ஆளாவதை விரும்ப மாட்டார்கள்!

**□ ரூ. 25 பரிசு பெறுபவர் :**
**ஏ. செந்தில்குமார்,**
**14, காட்டேரி தேவர் வீதி,**
**சூலூர் - 641 402.**



நீண்ட நாள் ஆசை!



• தற்காப்பு...



...உணர்வில்...



• மேதாவித்தனம்

● **ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.**

? ***ஜெயாவின் சீற்றம் தணிந்திட ராவுக்கு ஒரு யோசனை தாருங்களேன்?***

! "சு. சுவாமி என் மீது ராக்கெட் விடப் போவதாக பயமுறுத்துகிறார்" என்ற அபத்தக் குற்றச்சாட்டை (ராக்கெட் விடுவது என்ன பட்டாசு கொளுத்துவது போன்றதா?) ஜனாதிபதிக்கு ஜெ. அனுப்பி வைக்க, "நிலைமை விபரீதமாகுமுன் பிரதமர் நடவடிக்கை எடுப்பார் என்று நம்புகிறேன்" என்ற பதில் நகலோடு குற்றச்சாட்டைப் பி[illegible]நக்கு அனுப்பியுள்ள சர்மாவின் மேதாவித்தனத்தை மதித்து, பிரதமர் சு.சுவாமி மீது நடவடிக்கை எடுத்தால் ஜெ. மனசு சாக்லேட் ஐஸ்கிரீமாகக் குளிர்ந்து விடாதா!

● **அ. சுகுமார், காட்டுக்காளூர்.**

? ***சமீபத்தில் சிரிப்புக்கிடமான சம்பவம்?***

! "சட்டப் புத்தகங்கள் விலை அதிகமாக இருப்பதால்தான் நிறைய ஃபீஸ் வாங்குகிறேன்" என்று பராசரன் கூற, "ஜெயா பப்ளிகேஷன்ஸில் அச்சாகியிருந்தால் விலை மலிவாக இருந்திருக்கும்" என்று சு.சுவாமி கிண்டலடிக்க, உயர் நீதிமன்றமே சிரிப்பில் கிடுகிடுத்துப் போய்விட்டதே!

● **எம். தனபாலன், திண்டுக்கல்.**

? ***ஆளாளுக்கு ஆளுனரை விமர்சிப்பது ஏன்?***

! ஜெ. மீது வழக்குத் தொடர சு.சுவாமிக்கு அனுமதி அளித்து விட்டதால் அவர் கடந்த காலத்தை இன்று விமர்சிக்கிறார்கள். இந்த வாதம் செல்லாது. குற்றமற்றவரே குற்றம் சுமத்த முடியும் எனில் அத்தகைய கௌதம புத்தர் இன்றைய அரசியலில் யாருமே கிடையாது. "பீஷ்ம நாராயண்சிங் அனுமதி அளிக்கவில்லையே; சென்னா ரெட்டிக்கு அரசியல் நோக்கு" என்று மற்றொரு வாதம். ஏன், 'பீஷ்மநாராயண்சிங் அரசியல் நோக்கில் அனுமதி தராமலிருந்தார்' என்றும் சொல்லலாமில்லையா!

● **ஏ. செந்தில், போத்தனூர்.**

? ***ஷார்ஜா கோப்பையை இந்த முறையாவது இந்தியா வெல்லுமா?***

! பாக் குட்டையில் விழுந்த கள், ஸ்ரீலங்காவை வென்றதில் சற்றே நிமிர்ந்தது. ஆச்சர்யத்திலும் ஆச்சர்யமாக ஸ்ரீலங்கா பாகிஸ்தானை வென்றதும் இந்திய அணியின் கைகளுக்குக் கோப்பை வந்தே விட்டது! இனி நழுவ விட்டால்தான் உண்டு.

● **எல். மீனாட்சி சுந்தரம், மதுரை - 16.**

? ***"காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள் கூண்டோடு ராஜினாமா"வால் யாருக்கு என்ன லாபம்?***

! ஒரு லாபமும் இல்லை என்பதால்தான் ராவிடம் மூக்குடைபட்டுத் திரும்பிவந்த எஸ்.ஆர்.பி., சட்டமன்றத்தில் மீண்டும் ஆஜராகி, பேச அனுமதி மறுக்கப்பட்டு வெளியேறியிருக்கிறார். 'ஜெ. மீது கிரிமினல் வழக்கு நீதிமன்றத்தில் இருப்பதால் அவருக்குச் சட்டமன்றத்தில் பேச அருகதை இல்லை' என்ற எஸ்.ஆர்.பி.யின் கருத்து நியாயமானதே.

வட்ட மேஜை

# விலைக்கு பதில் தரத்தை உயர்த்துகிறீர்கள்!

◆ அடுத்து வருவது ஆட்கொல்லி பட்ஜெட் என்ற தலையங்கம் படித்தேன். முன்பெல்லாம் அரசியலில் ஏமாற்றுவதும் உண்டு. ஆனால் இப்பொழுதெல்லாம் ஏமாற்றுவதே அரசியல் என்றாகிவிட்டது. அதற்கு ஒரு நல்ல உதாரணம் சமீபத்திய தமிழக பட்ஜெட். ஏற்கெனவே பஸ்கட்டணத்தை உயர்த்ியாயிற்று. மின் கட்டணம் எகிறிவிட்டது. பத்திரச் செலவு இரண்டு மடங்காகி விட்டது. இப்படியாக பட்ஜெட் சமர்ப்பிக்கப்படுவதற்கு முன்னரே மக்களுக்குக் கிடுக்கிப் பிடி போட்ட பிறகு, வரி இல்லாத பட்ஜெட்தானே சமர்ப்பிக்க முடியும்? வருங்காலத்தில் ஆடம்பரச் செலவுகளைக் குறைத்தாலே வரி இல்லாத பட்ஜெட்டை வருடாவருடம் சமர்ப்பிக்க முடியும். எது எப்படியோ? ஆட்சியாளர்கள் மாறினாலும் மாறாவிட்டாலும் அடுத்த வருட பட்ஜெட் ஆட்கொல்லி பட்ஜெட்தான்! பொது மக்கள் மிகவும் சிரமப்படப் போகின்றார்கள் என்பதைத் தலையங்கம் மூலம் உணர்த்தியிருக்கும் கல்கிக்கு நன்றி!

சீர்காழி, சுந்தர் அழகேசன்.

◆ ஆளுங்கட்சியினரின் முக மூடிகளைக் கிழிக்கிற மாதிரி தலையங்கம்... எ. ஒன்!

கருமத்தம்பட்டி, அ. இராஜப்பன்.

◆ 'கலகல கோவை' மிக மிக அருமை. ஜோக்ஸ், கவிதை, துணுக்குகள் என்று அடுக்கி கொண்டே போய் அசத்தி விட்டீர்கள்.

காப்பரத்தாம்பட்டி,
கே. ராஜாதிருவேங்கடம்.

◆ "பெஸ்ட் ஆஃப் லக் ஆனந்த்!" என்ற தலைப்பில் தாங்கள் எழுதிய செய்தியைப் படித்தேன். விஸ்வநாதன் ஆனந்த் நமது இந்தியாவில் அதுவும் தமிழகத்தில் பிறந்ததை எண்ணி நாமெல்லாம் உலக அரங்கில் மார்தட்டிப் பெருமை கொண்டாடலாம்.

இலால்குடி, எம். இராஜேந்திரன்.

◆ "காத்திருந்து, காத்திருந்து...." என்ற சிறுகதை இக்காலத்தில் குழந்தைகளைப் பள்ளியில் சேர்க்க அவர்களின் பெற்றோர்கள் உண்மையாகச் சந்திக்கும் நிலையைப் படம் பிடித்து நம் கண்முன் நிறுத்தி உள்ளது. எழுதிய "சாருகேசி"க்கு என் மனமார்ந்த பாராட்டுக்கள்.

வேலூர் - 1, அனிதா.பி.

◆ '2 வது முகம்' சிறுகதை படித்தேன். நடுத்தர வர்க்கக் குடும்பக் கதையோட்டம். கண்ணுக்குத் தெரியாத கடுகு சைஸ் கதை. பாட்டிதான் கடுகு என்றாலும், காரம் குறையவில்லை. பாட்டி நிற்கும் திசை பார்த்துக் கும்பிட்டு நன்றி சொல்லத் தோன்றுகிறது. 2 வது முகம் பாட்டி மாதிரி எல்லோருக்கும் இருந்துவிட்டால் எந்தப் பிரச்னையும் இல்லை. அழகான கதை. அன்பான முடிவு.

இலால்குடி, ஆங்கரை பைரவி.

◆ நாட்டு நடப்பை "பெரிய பெரிய ஆசை" என்னும் தலைப்பில் அழகுமிகு கவிதை வடிவில் வடித்திருந்த வசீகரனுக்கு எனது பாராட்டு!

சாத்தூர், எம். செல்லையா.

◆ இந்த வார கல்கியில் பக்கத்துக்குப் பக்கம் ஜோக்குகளையும், காதல் சிரிப்புகளையும் அள்ளித் தெளித்து எங்களை ஆனந்தக் கடலில் ஆழ்த்தி விட்டீர்கள். கல்கியின் விலை உயரும் என்று எதிர்பார்த்தால், அதன் தரத்தை மட்டுமே உயர்த்திக் கொண்டே போகிறீர்களே! பாராட்டுக்கள்.

முத்துராமலிங்கபுரம்,
வி.பா. கிருஷ்ணன்.

◆ கோட்டானின் ஆறு சங்கதிகளும் அதிர்வேட்டாய்ச் சதிராடின.... கற்பனை அற்புதம் கண்டு ஜெ கட்-அவுட் உயரத்துக்குப் புகழ ஆசைப்படுகிறேன்.

மதுரை - 16,
எல்.எம். அபிதாட்சயா.

◆ பத்மா ரவி சங்கரின் 'கட்டு விடு சூர்யா' மிகவும் விறுவிறுப்பாகச் சென்று இனிதே முடிந்தது. எழுத்தாளருக்குப் பாராட்டுக்கள்.

பரமக்குடி, ஜனனி குமார்.

◆ தேசப்பற்று, மனித நேயம், இன்னும் உயிர் நீத்துவிட வில்லை என்பதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு, 'கட்டு விடு சூர்யா'. பாராட்டுக்கள்.

திருவிடைமருதூர்,
ஏ. சிந்துபாரதி.

◆ மதுமிதாவின் 'வரன்' சிறுகதை, முற்போக்கும் துணிவும் கொண்ட தமயந்தி போன்றவர்கள் பெருக வேண்டும் என எண்ண வைத்த படைப்பு.

திருவண்ணாமலை,
என். சண்முகம்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : கி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka